மலர் 15 இதழ் 296

NAVAMANI (Tamil Daily) MADRAS

4 பக்கம் 25 காசு

Regd M No. 7897

Phone No. 76390; 76399

"நவமணி"
சந்தா விகிதம்

1—9—74 முதல்
தனிப் பிரதி 25 காசு

| | உள்ளூர் ஏஜண்டு மூலம் | தபால் மூலம் |
|---|---|---|
| 1 மாதம் | ரூ. 7-50 | ரூ. [illegible]-00 |
| 3 மாதம் | ரூ. 22-50 | ரூ. 24-00 |
| 6 மாதம் | ரூ. 45-00 | ரூ. 48-00 |
| 1 வருடம் | ரூ. 90-00 | ரூ. 96-00 |

# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த தினசரி

சென்னை 10—7—75 வியாழன்

வெளியூர் 11—7—75 வெள்ளி

சினிமா
செய்திகள்
4-ம் பக்கம்

## சென்னை நகரில்

# 456 பங்களாவாசி மீது நடவடிக்கை

## மத்திய அரசின் "பறக்கும் படை" மும்முரம்

**சென்னை, ஜூலை 10— சென்னை நகரில் 456 சொகுசு பங்களாக்களின் சொந்தக்காரர்கள் மீது மத்திய அரசு வருமான வரி இலாகாவின் பறக்கும்படை திடீரென்று நடவடிக்கை எடுத்துள்ளது.**

சென்னை, பம்பாய், கல்கத்தா, டெல்லி ஆகிய பெரு நகரங்களில் சொகுசு பங்களாக்களை வாங்குவதில் கள்ளப்பணம் பயன்படுத்தப்படுவதைத் தடுப்பதற்காக விசேஷ பறக்கும் படைகளை மத்திய அரசின் வருமான வரி இலாகா அமைத்துள்ளது.

அதன் படி சென்னையில் விலையுயர்ந்த சொகுசு கட்டிடங்களின் சொத்து மதிப்பு குறைவாகக் காட்டப்பட்டிருந்தால் அவைகளுக்கு புதிதாக சொத்து மதிப்பீடு செய்யநடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாக இன்று சென்னையில் நிருபர்களிடம் மாநகராட்சி தனி அதிகாரி டி. வி. அந்தோணி கூறினார்.

சென்னை நகரில் ஆண்டுதோறும் 5-ல் ஒரு பங்கு கட்டிடங்களுக்கு சொத்து மதிப்பீடு புதிதாக நடக்கிறது. அதைத் தொடர்ந்து சொத்து வரி உயர்த்தப்படுகிறது. அதனால் ஆண்டுதோறும் மாநகராட்சிக்கு ஒரு கோடி ரூபாய் முதல் ஒன்றரை கோடி ரூபாய் வரை கூடுதல் வருமானம கிடைக்கிறது.

### 456 பேர் மீது நடவடிக்கை

சென்னை நகரில் 456 சொகுசு கட்டிடங்களின் சொந்தக்காரர்கள் மீது நடவடிக்கை எடுக்கப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. அவர்களில் 18 பேருக்கு நோட்டீஸ் அனுப்பப்பட்டு வட்டதாகக் கூறப்படுகிறது.

சொத்துக்களின் மதிப்பு மிகக்குறைவாகப் போடப்பட்டுள்ள கட்டிடங்கள் விஷயத்தில் அந்தக் கட்டிடங்களை அந்த விலைக்கே ஏன் சர்க்கார் மேற்கொள்ளக்கூடாது என்பதற்கு காரணம கேட்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது,

ஜனாதிபதிக்கு கடிதம்:

## இராணுவ ஊழியருக்கு ஊதிய உயர்வு குறைப்பு

சென்னை, ஜூலை 10— சென்னையில் உள்ள தென் பிராந்திய ராணுவத் தலைமை அலுவலகத்தில் பணியாற்றிய ஒரு ஊழியரின் ஓராண்டு சம்பள உயர்வு குறைக்கப்பட்டது சரி என்று சென்னை ஹைகோர்ட் தீர்ப்பளித்துள்ளது.

அவர் பெயர் சி. எம். ஸ்டீபன். இவர் தன்னுடைய உத்தியோகவிஷயமாக ஜனாதிபதிக்குக் கடிதம் எழுதினராம் அப்படி எழுதியது தவறு என்று அந்த அலுவலகத்தின் தலைமை என்ஜினியர், ஸ்டீபனுடைய ஓராண்டு சமபள உயர்வைக் குறைத்துவிட்டாராம.

இது பற்றி அந்த ஊழியர் சென்னை ஹைகோர்ட்டில் வழக்குத் தொடர்ந்தார். நீதிபதி கே. நாராயணசாமி இதை விசாரித்துஇலாகாவின் உத்தரவை ரத்து செய்தார்.

அதன் பிறகு மேற்படி இலாகாவினர் இது தொடர்பாக "அப்பீல்" மனு ஒன்றை ஹைகோர்ட்டில் தாக்கல் செய்தனர்.

பிரதம நீதிபதி வீராசாமி எஸ். நடராஜன் ஆகியோர் இதை விசாரணைக்கு ஏற்று. இலாகாவின் உத்தரவு சரி என்று தீர்ப்பளித்தனர்.

## புதிய போலீஸ் கமிஷனர் பதவி ஏற்றார்

சென்னை, ஜூலை 10— சென்னை நகரின் புதிய போலீஸ் கமிஷனராக கே. ராதாகிருஷ்ணன் இன்று பொறுப்பு ஏற்றுக் கொண்டார்,

## ரூ 15 லட்சம் வரி ஏய்ப்பு: 6 பேர் கைது

சென்னை, ஜூலை 10— கோவை மாவட்டத்தில் சுங்க அதிகாரிகள் திடீர் சோதனை நடத்தினர்கள். அதன் விளைவாக 6 பேர் கைது செய்யப்பட்டனர்.

ஈரோடு, சித்தோடு ஆகிய ஊர்களில் இந்த திடீர் சோதனை நடந்தது.

நெருக்கடி நிலை பிரகடனம் வெளியிடப் பட்டதைத் தொடர்ந்து சுங்க அதிகாரிகள் பல்வேறு இடங்களுக்குப் போய் இந்த சோதனை நடத்தினர்கள்.

இதன் காரணமாக 15 லட்சம் ரூபாய்க்கு வரி ஏய்ப்பு கண்டு பிடிக்கப்பட்டது இது சம்பந்தமாக 6 பேர் கைது செய்யப்பட்டனர் அவர்களில் பஞ்சாயத்து யூனியன் தலைவர் ஒருவர் அடங்கியுள்ளார்.

## ஒரு மணி நேரம் அதிகம் வேலை செய்யும் ஊழியர்கள்

சென்னை, ஜூலை 10—நாட்டில் நெருக்கடி நிலைமை அமுல்படுத்தப்பட்டுள்ளதையொட்டி இனி தினமும் ஒரு மணி நேரம கூடுதலாக வேலை செய்வதென்று சென்னையில் உள்ள மத்திய எக்சைஸ் கலெக்டர் அலுவலகத்தைச் சேர்ந்த எல்லா ஊழியர் சங்கங்களும முடிவெடுத்துள்ளன

இதன்படி ஊழியர்கள் மாலையில் 5 முதல் 5-30 மணி வரை அரை மணி நேரம் கூடுதலாக வேலை செய்வர். தவிர பகல் உணவு இடைவேளை நேரமான ஒரு மணி நேரத்லத அரை மணியாகக் குறைத்துக் கொண்டுள்ளனர். எனவே மொத்தம் ஒரு மணி நேரம் கூடுதலாக வேலை செய்வர்.

ரூ. $1\frac{1}{2}$ கோடி அரிசி பேரம் சம்பந்தமாக

## மந்திரிகளை விசாரிக்க கோரிக்கை: நீதிபதி நிராகரித்தார்

சென்னை, ஜூலை 10—ரூ. $1\frac{1}{2}$ கோடி அரிசி பேரம சம்பந்தமாக நடைபெறும நீதி விசாரணையில் அமைச்சர் மாதவன் அமைச்சர் ராசாராம நெல்லிக்குப்பம கிருஷ்ணமூர்த்தி மற்றும் பலரை சாட்சிகளாக விசாரிக்க வேண்டும் என்ற கோரிக்கையை விசாரணைக்கமிஷனின் நீதிபதி டி. ராமபிரசாத்ராவ் நிராகரித்தார்.

இவர்களை சாட்சிகளாக விசாரிக்கவேண்டும என்று வக்கீல் கண்ணன் நீதிபது முன்னிலையில் நேற்று மனு தாக்கல் செய்திருந்தார்.

அதன்மீது இன்று இரு தரப்பு வாதங்கள் நடந்தன. வாதங்களைக் கேட்ட பின்னர் நீதிபதி தீர்ப்பளித்தார்.

அமைச்சர் மாதவன், அமைச்சர் ராசாராம நெல்லிக்குப்பம கிருஷ்ணமூர்த்தி முதலியோருக்கு சமமன் அனுபபவேண்டும என்ற கோரிக்கையை நீதிபதி ஏற்கவில்லை.

முன்னதாக கம்யூனிஸடு கட்சி சார்பில் வக்கீல் பாலபாண்டியன், புதிதாக மூன்று சாட்சிகளை சேர்க்கவேண்டும் என்று நீதிபதியிடம் அனுமதி கோரினர்.

இக்கோரிக்கையும் நிராகரிக்கப்பட்டது,

ஜம்புலிங்க முதலியார், தாண்டவராயன் ஆகியோரைச் சாட்சிகளாக வசாரிக்க வேண்டும் என்ற கோரிக்கையை நீதிபதி ஏற்றுக்கொண்டு அவர்களுக்குசம்மன் அனுப்ப உத்தரவிடுவதாக அறிவித்தார்.

விசாரணை தொடர்ந்து நடந்துவருகிறது.

காவிரி நீர் பிரச்னை:

## பேச்சு வார்த்தை தோல்வியா? ப. உ. ச. பேட்டி

சென்னை, ஜூலை 10— காவிரி நீர்ப் பிரச்னை குறித்து கர்நாடக முதல்வர் தேவராஜ் அர்சுடன் நடத்திய பேச்சுவார்த்தை தோல்வியா என்பதற்கு அமைச்சர் ப. உ. சண்முகம இன்று நிருபர்களிடம பதில் அளித்தார்.

காவேரி நீர்ப்பிரச்னையில் நடத்திய பேச்சுவார்த்தை தோல்வி என்று பத்திரிக்கைகளில் செய்தி வெளிவந்துள்ளதே என்று நிருபர்கள் கேட்டதற்கு பதில் அளித்து ப. உ. சண்முகம் கூறியதாவது:—

தோல்வி என்று சொல்லுவது சரியல்ல பொதுவாக பேச்சு வார்த்தை நம்பிக்கை ஊட்டுவதாகத்தான் இருக்கிறது.

தமிழ்நாட்டிற்குப் பாதகம் ஏற்படாத வகையில் ஒரு சுமுகமான முடிவு ஏற்படும என்ற நமபிக்கை எனக்கிருக்கிறது.

இவ்வாறு அமைச்சர் ப. உ. ச. கூறினர். மேலும அவர் கூறியதாவது:

வருகிற 17, 18 தேதிகளில் டெல்லியில் நீர்ப்பாசன அமைச்சர்கள் மாநாடு நடைபெற இருக்கிறது. ஜெகஜீவன்ராம் இந்த மாநாட்டைக் கூட்டியிருக்கிறார். அதில் கலந்து கொள்ள நான் டெல்லி செல்கிறேன். அப்போது அங்கு கர்நாடக முதல்வர் தேவராஜ் அர்சைச் சந்தித்து மேலும்காவிரி நீர்ப் பிரச்னை பற்றிப் பேசுவேன்.

இவ்வாறு ப. உ. ச. கூறினர்.

## இந்திராவுக்கு ஆதரவு: ஜனநாயக சக்திகளுக்கு கம்யூனிஸ்டு கோரிக்கை

**சென்னை, ஜூலை 10— பிரதமர் இந்திரா எடுத்துள்ள நடவடிக்கைகளை சரியான வழியில் நிறைவேற்ற ஜனநாயக சக்திகள் பாடுபடவேண்டுமென்று இந்திய கம்யூனிஸ்ப் கட்சியின் செயற்குழு கேட்டுக் கொண்டுள்ளது.**

பிரதமர் இந்திராவின் 20 அம்ச திட்டங்களை இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் நாட்டுக்குழு வரவேற்றுள்ளது.

ஜனநாயகத்தை தகர்த்துவிட்டதாகக் கூறப்படுவது உண்மைக்குபுறம்பானதாகும்

பல நிர்ப்பந்தக்களை உண்டாக்கி பிற்போக்குவாதிகள் மத்திய அரசை தங்கள் பிடியில் வைத்திருக்கவிரும்பினர்கள்.

பிற்போக்கு சக்திகளிடமிருந்து இந்தியாவைக் காக்க இந்திரா எடுத்த நடவடிக்கை சரியானது.

ஜனநாயகத்தைக்காக்கவும நாட்டில் ஏற்பட இருந்த பிற்போக்காளர்களின் சர்வாதிகாரத்தைத் தடுக்கவும், நாட்டில் அரசும. பிரதமர் இந்திராவும எடுத்துள்ள நடவடிக்கைகளை சரியான வழியில் நிறைவேற்ற ஜனநாய சக்திகள் பாடுபட வேண்டும.

குறிப்பாக அ.தி.மு.க. இந்திய தேசிய காங்கிரஸ் தமிழ்நாடு முஸ்லிம லீக், புரட்சி பார்வர்ட்பிளாக், உழைப்பாளர் முன்னேற்றக்கட்சி, குடியரசுக்கட்சிதாழ்த்தப்பட்டோர முன்னேற்றக் கட்சி ஆகியோருடன் இந்திய கம்யூனிஸ்ட் கட்சியும் இணைந்து தமிழகத்தில் அரசியல் மாற்றத்தை கொண்டு வர வேண்டுமென இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாட்டுக் குழு விருமபுகிறது.

இவ்வாறு சென்னையில் நடந்த இந்திய கமயூனிஸ்ட் கட்சியின் தமிழ்நாட்டு செயற்குழு தீர்மானங்கள் நிறைவேறியுள்ளது.

## மாடியிலிருந்து விழுந்த பெண் மரணம்

சென்னை, ஜூலை 10— வீட்டு மாடியிலிருந்து கீழ விழுநத ஒரு பெண் ஒருத்திபரிதாபகரமாக மரணமடைந்தார். அவர் பெயா ஜெகதாம்பாள் வயது 50 சென்னை புரசைவாக்கத்தை சேர்ந்தவர்.

நேற்று முன்தினம் தன் வீட்டு மாடியில்நின்றுகொண்டிருந்த ஜெகதாம்பாள் திடீ கீழ விழுந்துவிட்டதாகக் கூறப்படுகிறது. இதனால் இடுப்பிலும் காலிலும் படுகாய மடைந்த அவா சென்னை பொது மருத்துவமனையில் சிகிச்சைக்காக அனுமதிக்கப்பட்டு அன்று இரவு பாதாபமாக மரணமடைந்தார்.

மேல் மாடியிலிருநது அவர் எப்படி விழுந்தார என்று தெரியவில்லை போலீசார் இது பற்றி விசாரணை செய்து வருகிறார்கள்.

## மலிவு விலைத்துணி உற்பத்தியை அதிகரிக்க மில்களுக்கு உத்தரவு

**புதுடெல்லி, ஜூலை 10—ஏழை எளிய மக்களுக்கு குறைந்த விலையில் பலவகைத் துணிகளும் கிடைக்கும்படி செய்ய ஸ்டாண்டர்ப் துணியில் பல ரகங்களைத் தயாரிக்கும்படி மில்களுக்கு மத்திய அரசாங்கம் உத்தரவிடும்.**

அதே நேரத்தில் மத்திய அரசு எடுத்துள்ள ஒரு முடிவின்படி நாட்டில் தயாரிக்கப்படும் பருத்தித் துணி ரகங்கள் 10 சத விகிதம் குறைக்கப்படும். இந்த ரகங்களை 2 ஆண்டுகளுக்குள்ளாக மேலும் 25 சத விகிதம் குறைக்கவும் நடவடிக்கைகள் எடுக்கப்படும்.

அரசாங்க உத்தரவுப்படி மில்கள் ஏற்கெனவே ஏழை எளிய மக்களுக்கென ஸ்டாண்டர்ட் துணிகளைத் தயாரித்து வருகிறது. ஏழை மக்கள் எவ்விதமான துணி ரகங்களை விரும்புகிறார்கள் என்பதை அறிந்து ஸ்டாண்டர்ட் துணியில் பலவித ரகங்களைத் தயாரிப்பது பற்றி அரசு சிந்தித்து வருகிறது. மில்கள் இப்போதுள்ளதை வட அதிக அளவில் கண்ட்ரோல் அல்லது ஸ்டாண்டர்ட் துணிகளைத் தயாரிக்கும்படி செய்யவும அரசு யோசித்து வருகிறது.

இத்தகவல்களை வர்த்தக அமைச்சகத்துக்கான ஆலோசனை கமிட்டி கூட்டத்தில மத்திய வாத்தக மந்திரி சட்டோபாத்யாயா தெரிவித்தார். இக்கமிட்டி பார்லிமெண்ட் உறுப்பினர்கள் அடங்கியதாகும்.

இக்கமிட்டி கூட்டத்தில் மந்திரி சட்டோபாத்யாயா ஒரு கேள்விக்குப் பதிலளிக்கையில் இப்போது பல்வேறு நீளத்திலும் அகலத்திலும் 1046 ரகப்பருத்தித் துணிகள் தயாரிக்கப்படுவதாகத் தெரிவித்தார்.

### தரம் பற்றிப் புகார்

ஸ்டாண்டர்ட் துணி குறித்துக் கூறப்படும் புகார்கள் பற்றி மந்திரி குறிப்பிட்டார். மார்ச் மாதத்திலிருந்து ஸ்டாண்டர்ட துணியின்தரத்துக்குப் புதிய வரைமுறைகள் நிர்ணயிககப பட்டுள்ளதாகவும், மார்ச்சுக்குப்பிறகு தயாரிக்கப்படும் துணியின் தரம் நல்லதாக இருப்பதாகவும் மந்திரி கூறினார். இத்துணி குறிப்பாக கிராமப்புறங்களில் உள்ள மக்களுககுப் போய்ச்சேரும்படி பார்த்துக கொள்ளப்படும். இந்த விஷயம் ஆராயப்படுகிறது. அடுத்த சில தினங்களில் அது பற்றி இறுதி முடிவு எடுக்கப்படும் என்றும் மந்திரி கூறினார்.

சர்வதேச மார்க்கெட்டில் இந்தியத்துணிகளின் விலைகளை சரசமாக்கும் பொருட்டு, ஓரளவுக்கு ரொக்க உதவி அளிக்கவேண்டியிருக்கலாம் என்றும் அவர் சொன்னார்.

## வைத்திய கல்லூரிகள் 14-ம் தேதி திறப்பு

சென்னை, ஜூலை 10— சென்னையிலுள்ள வைத்தியக் கல்லூரிகள் வருகிற 14ம் தேதி திறக்கப்படுகிறது.

## காமராஜ்-சஞ்சீவரெட்டி சந்திப்பு

சென்னை, ஜூலை 10— பழைய காங்கிரஸ் தலைவர் காமராஜரை நேற்று அவரது இல்லத்தில் லோகசபை முன்னாள் சபாநாயகர் என். சஞ்சீவரெட்டி சந்தித்து உடல் நிலை குறித்து விசாரித்தார். இரு தலைவர்களும் சுமார் 20 நிமிஷ நேரம் பேசிக் கொண்டிருந்தனர்.

காமராஜ் உடல்நிலை நன்கு தேறிவருவதாகவும் அவருக்கு காய்ச்சல் இல்லை என்றும் அறிவிக்கப்பட்டது.

## புதிய தபால் ஸ்டாம்புகள்

புதுடெல்லி, ஜூலை 10— தபால் தந்தி இலாகா இந்த மாதம் 15-ம் தேதியன்று மூன்று புதிய தபால்ஸ்டாம்புகளை வெளியிட விருக்கிறது. இவற்றின் விலை 20 காசு 50 காசு, 2 ரூபாயாக இருக்கும.

இருபது காசு தபால் தலைகள் ஆலிவ் பச்சை வண்ணத்தில் அச்சிடப்படும். இவற்றில் ஒரு கைவினை பொம்மையின் படம் சித்தரிக்கப்படும். சாம்பல் நீல வண்ணத்திலான 50 காசு தபால் தலைகளில் ஒரு பறவையின் படம் இருக்கும். சிவப்பு கலந்த ஊதா, ஊதா வண்ணங்களில் அச்சிடப்படும் 2 ரூபாய் தலைகளில் இமயமலையின் படம் இருக்கும்.

இத்தபால் தலைகள் ஐந்தாவது வரிசையின கீழ் வெளியிடப்படுகின்றன. இவ்வரிசையின் கீழ் மேலும் எட்டுதபால் தலைகள் வெளியிடப்படவிருக்கின்றன.

## வாசகர்களுக்கு ஓர் அறிவிப்பு

அருட்பெருஞ்ஜோதி
இராமலிங்க வள்ளலார் அருளிய
சமரச சுத்த சன்மார்க்கக் கொள்கை விளக்கவுரை

"நவமணி" இதழில் இன்று தொடங்கி தினந்தோறும் "தயவுப் பெரு நெறி" என்ற பெயரில், 'அருட்பிரகாச இராமலிங்க வள்ளலார்' அவர்களின் சமரச சுத்த சன்மார்க்கக் கொள்கைகளை திண்டுக்கல் சத்திய ஞான கோட்டம் தவத்திரு சுவாமி சரவணனந்தா அவர்கள் எழுதிவர இசைந்துள்ளார். வாசகப் பெருமக்கள் படித்து அருளின்பம் பெறுவார்களாக.




வெள்ளி ஜூலை 11

சென்னை-1

(416.7 மீ)

காலை

6-55 வந்தே மாதரம்
6-05 குறளமுதம்
6-10 வழிபாட்டிசை
6-30 காந்தி அஞ்சலி
7-00 தமிழ்மணம்
7-25 மீண்டும் கேட்போம்
7-35 மெல்லிசை
7-45 திரைகானம்
8-00 சுசிலா அச்சுதராமன் —பாட்டு
9-15 திரைப்பாடல்கள்
9-30 ஒலிபரப்பு முடிவு

பகல்

12-02 பத்மாக்ஷி சித்தர் —பாட்டு
12-50 மெல்லிசை
1-00 மாதர் நிகழ்ச்சி
1-30 பத்மாக்ஷி சித்தர் —பாட்டு
2-10 இசைத்தட்டு
2-30 வி. பாக்கியலக்ஷ்மி —வயலின்
3-00 ஒலிபரப்பு முடிவு

மாலை

5-00 ஒலிக்கதிர்
5-10 வி. பாக்கியலக்ஷ்மி —வயலின்
6-05 திரைப் பாடல்கள்
6-15 வாத்திய விருந்து
7-00 திரைகானம்
7-25 விவசாயிகளுக்கு
8-00 புகழ்வெறி —நாடகம்
8-15 மெல்லிசை
8-30 சொல்லில் இன்பம் —பேச்சு
8-45 போகஸ்
8-55 மெல்லிசைமெட்டுக்கள்
9-15 பள்ளுப்பாட்டு
9-30 டி.வி.சங்கரநாராயணன் —பாட்டு
10-30 திரைகானம்
11-00 உலகச் செய்திகள்
11-05 வானொலி—முடிவு

சென்னை-2

(211.3 மீ)

காலை

6-55 வந்தேமாதரம்
7-00 செய்திகள் (ஆங்கிலம்)
7-15 மெல்லிசை
7-25 கே.வி. லக்ஷ்மி—பாட்டு
9-00 சம்ஸ்கிருதச செய்தி
9-05 கடிதம் (ஆங்கிலம்)
9-10 ஒலிபரப்பு முடிவு

பகல்

12-40 மேற்கத்திய இசை
1-30 ஒலிபரப்பு முடிவு

மாலை

4-15 ஸ்போர்ட்ஸ்
5-50 திரை மெட்டுகள்
6-00 மேற்கத்திய இசை
6-30 & 7-15 இளைய பாரதம்

இரவு

8-00 ஸ்போர்ட்ஸ்
8-05 இளையபாரதம்
8-15 நாதஇன்பம் —வீணை
9-00 வாத்திய விருந்து
9-15 ஸ்பாட்லைட்
9-30 தெலுங்கு நிகழ்ச்சி
10-00 மேற்கத்திய இசை
11-00 ஒலிபரப்பு முடிவு

திருச்சி

(319. மீ)

காலை

6-00 வந்தேமாதரம்
6-10 பாமாலை
6-20 நெறிவிளக்கம்
6-30 விரிவாக்கப் பணியாளர்களுக்கு
6-35 துதிப்பாடல்கள்
7-00 காந்தி அஞ்சலி
7-25 எஸ். நாதமுத்து —நாதஸ்வரம்
8-20 நினைவில் நின்றவை (இ. த.)
8-45 பலகணி
9-00 ஒலிபரப்பு முடிவு

பகல்

12-02 திரை இசை
12-50 தேசபக்திப் பாடல்கள்
1-00 மாதர் நிகழ்ச்சி
1-30 எஸ். நாதமுத்து —நாதஸ்வரம்
2-10 நலம்பட வாழ்வோம்
2-15 வண்ணச் சுடர்
2-30 ஒலிபரப்பு முடிவு

மாலை

5-30 தொழிலாளர்களுக்கு
6-10 திரை இசை
6-40 கிராம நிகழ்ச்சி
7-25 விவசாயிகளுக்கு
8-00 திரைப்பட இசை
8-30 நாட்டுக்கு நல்லது
9-15 பேட்டி (ஆங்கிலம்)
9-30 சென்னை அஞ்சல்
10-30 ஒலிபரப்பு முடிவு

■ சென்னை 1-ல் தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15. ஆங்கிலத்தில் செய்தி பகல் 12-00, மாலை 2-00, 6-00, இரவு 9-00. மாநிலச்செய்திகள் பகல் 12-30, 6-30.

■ திருச்சி: தமிழில் செய்தி காலை 7-15, 12-40, மாலை 7-15 ஆங்கிலத்தில் செய்தி:

காலை 8-10, 12-00, 2-00, 6-00, 9-00.

விவிதபாரதி:

இரவு 9-15 ராம்ரஹீம் மேடை நாடகம் (4)

ஓடும் ரெயிலில்

# ரூ. 1 லட்சம் பார்சல் திருட்டு: 7 பேர் கைது

சென்னை, ஜூலை 10—ஓடும் ரெயிலில் ரூ. 1 லட்சம் பெறுமானமுள்ள பார்சல்களைத் திருடியதாக 7 பேர்களைப் போலீசார் கைது செய்துள்ளனர்.

பல இடங்களிலிருந்து இவர்கள், சென்னைக்கு வேலை தேடி வந்தவர்கள் என்று கூறப்படுகிறது.

இந்தக் கூட்டம் சென்னைக்கும் திருவள்ளூருக்கு மிடையே ஓடும் சரக்கு ரெயில்களிலும், சென்னைக்கும் திண்டிவனத்திற்கும் இடையில் ஓடும் சரக்கு ரெயில்களிலும் பார்சல்களை திருடி வந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

எவர்சில்வர் பாத்திரங்கள், மோட்டார்களின் உதிரி பாகங்கள், டெலிபோன் மற்றும் எலக்ட்ரானிக் சாமான்கள் போன்ற பொருள்களைத் திருடியதாகச் சொல்லப்படுகிறது. இவற்றின் மதிப்பு ரூ 1 லட்சம் என்று கூறப்படுகிறது.

இந்தக் கூட்டத்தினரிடமிருந்து 87.500 ரூபாய் மதிப்புள்ள பொருள்கள கைப்பற்றப்பட்டுள்ளன.

கைதானவர்கள் விவரம் வருமாறு:

ராமன்என்றபீட்டர்(வயது 22), மகேந்திரன் (22) கார்த்திகேயன்(22), பரமசிவம்(20) அந்தோணி (26), சந்திரசேகரன்(23), போஸ்(21).

இவர்கள் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டுள்ளது.

எதிர்க்கட்சியினர்

# ஜனநாயகத்தை தடம் புரளச் செய்துவிட்டனர்: இந்திரா பேச்சு

புதுடெல்லி, ஜூலை 10—"எதிர்க் கட்சியினர் ஜனநாயகத்தைத் தடம் புரளும்படி செய்துவிட்டனர்" என்று பிரதமர் இந்திரா காந்தி கூறினார்.

அதே நேரத்தில் அவர் ஜனநாயகத்தை இந்தியா கைவிட்டு விடவில்லை என்றும் சொன்னார்.

ஆப்பிரிக்காவில் மொசாம்பிக் நாடு சுதந்திரம் பெற்றுள்ளதையொட்டி டெல்லியில் ஒரு விழா நடந்தது. அதில் பிரதமர் இந்திரா பேசுகையில் கூறியதாவது:—

இப்போது ஜனநாயகம்பற்றி அதிகம் பேசப்படுகிறது. முன்னர் சர்வாதிகார ஆட்சிகளுக்கு எல்லா ஆதரவையும் அளித்து வந்த கட்சிகளும், கோஷ்டிகளும் நாடுகளும் இப்போது நாம் ஜனநாயகத்தைக் கைவிடுவதாக நம்மீது குற்றம் சாட்டுகிறார்கள்.

நாம் ஜனநாயகத்தைக் கைவிட்டுவிடவில்லை. ஏனெனில் ஜனநாயகம் என்பது மக்களின் ஆட்சியாகும். மக்களின் குரலுக்கு செவிசாய்த்து, அவர்களின் கோரிக்கைகளுக்கு செவிசாய்த்து அவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்து அவர்களின் க்ஷேமநலனுக்காகப் பாடுபடுகின்ற ஆட்சிமுறையாகும். இதைக்கைவிடவேமுடியாது.

## எதிர்க்கட்சிமீது புகார்

ஆனால் இந்திய ஜனநாயகம் தடம்புரளும்படி செய்யப்பட்டுவிட்டது. எதிர்க்கட்சியினர் இந்நாட்டில் ஜனநாயகம் தடம்புரளும்படி செய்துவிட்டனர். இவ்வித நிலைமைக்கு எதிர்க்கட்சிமீது மட்டும் தப்பு கூற முடியாது. நம் மீதும் தப்பு உள்ளது என்று நான் கூறுவேன். ஏனெனில் இவ்வித நிலைமையை நீண்ட காலத்துக்கு நாம் அனுமதித்து வந்திருக்கிறோம்.

தனிப்பட்டமுறையில் நான் தீவிர நடவடிக்கைளை விரும்புவதில்லை.

ஆனால் எதிர்க்கட்சித் தலைவர்கள் தமது பொறுப்புகளை உணருவார்கள் என்றும் எதற்கும் ஓர் வரம்பு இருக்கிறது என்பதை உணருவார்கள் என்றும் நான் எதிர்பார்த்து வந்தேன். அவர்கள் அப்படிச் செய்யவில்லை.

ஜனநாயகம் என்றால்எதிர்க்கட்சிகள் இஷ்டப்படி செயல்பட ஆளும்கட்சி சுதந்திரம் அளிக்கவேண்டும் என்பதல்ல. ஜனநாயகப்படி எதிர்க்கட்சிகளுக்கும் பொறுப்புள்ளது. அரசாங்கம் செயல்படுவதற்கு இடையூறு விளைவிக்காமல், நாட்டின் செயல்முறைக்கு இடையூறுவிளைவிக்காமல்ஜனநாயக விதிமுறைகளின்படி செயல்படவேண்டியதுஎதிர்க்கட்சிகளின் பொறுப்பாகும். ஆனால் எதிர்க்கட்சிகள் விசித்திரமான முறையில் செயல்பட்டுவந்தன.

4 ஆண்டுக்காலமாக வெறுப்பு இயக்கம் நடத்தப்பட்டு வந்தது. எந்த ஒரு விஷயம் கூறினாலும் அதை திரித்துக்கூறி வந்தனர். எந்தக்காரியம் செய்தாலும் அதற்கு களங்கம் கற்பிக்கப்பட்டது. மக்களின் மன உறுதியையும், தெம்பையும் குலைக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

நாட்டை எதிர் நோக்கியுள்ள பெரும்பணிகள் நிறைவேற்றப்பட நாட்டின் தன்னம்பிக்கையைக் காப்பாற்றி, ஒழுங்கை நிலை நாட்டுவது எந்த ஓர் அரசுக்கும் உள்ள கடமையாகும்.

இவ்வாறு இந்திரா காந்தி கூறினார்.

அரிசி பேர ஊழல் புகார் விசாரணை

# விசேஷ சலுகைக்காக மந்திரியை அணுகவில்லை வி. எஸ். டி. சாட்சியம்

சென்னை, ஜூலை 10— கேரளத்துக்கு அரிசி விற்பனை செய்ததில் விசேஷ சலுகை கோரி அமைச்சர் ப. உ. ச. வைத் தாம் சந்திக்கவில்லை என்று வி. எஸ். தியாகராஜ முதலியார் கோர்ட்டில் கூறினார்.

அரிசி பேரத்தில் ஊழல் நடந்ததாக அமைச்சர் ப. உ. சண்முகம் மீது கூறப்பட்ட புகார் பற்றிய விசாரணை நீதிபதி ராம பிரசாத் ராவ் முன்னிலையில் நடைபெற்று வருகிறது.

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் அட்வகேட் என். டி. வானமாமலை குறுக்கு விசாரணை செய்த போது அமைச்சர் சண்முகம சொல்லி பெடரேஷனின் நெல் அல்லது அரிசி கையிருப்புகளை விற்றது சம்பந்தமாக அதன் சார்பில் தான் கடிதங்கள் அனுப்பியதாகச் சொல்வதை சாட்சி மறுத்தார். இந்த "மோசடி பேரத்தை" நியாயமானதாக நடந்த பேரம்போல் காட்டும் பொருட்டு, சாட்சியின் உதவியுடன் இந்தக் கடிதங்கள் பைல்களில் சேர்க்கப்பட்டதாகச் சொல்வதையும் அவர் மறுத்தார்.

## தீர்மானம் நிறைவேற்றவில்லை

பெடரேஷனுக்கு 11 மெம்பர்கள் கொண்ட டைரக்டர்கள் போர்டு உள்ளது. அவர்களில் 7 பேர் நிர்வாகக்குழுவினர். 1970—71ல் கொள்முதல் செய்யப்பட்ட சம்பா ஸ்டாக்குகளை விற்பது அல்லது வாங்குவது பற்றி முன்னதாக தீர்மானங்கள் எதுவும் நிறைவேற்றப்படவில்லை என்று சாட்சி கூறினார்.

அரசின் அனுமதியின்றி அந்த ஸ்டாக்கை விற்றிருக்க முடியாதா எனக் கேட்டதற்கு, அரசுக்குச் சேரவேண்டிய ஸ்டாக் லெவி நெல்லாக டெலிவரி செய்யப்பட்டதென்றும், வெளி மார்க்கெட்டில் பெடரேஷனல் சுயமாகவே விற்க முடியும் என்றாலும் அரசு சில கட்டுப்பாடுகளை விதித்திருந்தது என்றும் சாட்சி விளக்கினார்.

உணவு மந்திரியையும உணவுத்துறை செயலாளரையும் அவர் அடிக்கடி சந்திப்பது உண்டா எனக் கேட்டதற்கு, "அதிகாரிகளை அடிக்கடி சந்தித்ததுண்டு. ஆனால் அமைச்சரை ஓரிரு முறைதான் சந்தித்திருக்கிறேன்" என்றார்.

## பக்கிரிசாமி பிள்ளை

கோர்ட்டின் கேள்வி ஒன்றுக்கு சாட்சி பதிலளிக்கையில், எந்தக்கடிதம், குறிப்பு அல்லது பைலிலும் பக்கிரிசாமி பிள்ளையைப் பற்றி பிரஸ்தாபம் இல்லை என்றும், திருவாரூரில் ஒரு நெல் கமிஷன் ஏஜண்டான பக்கிரிசாமி பிள்ளையைசென்னையில் தனது அலுவலகத்தில் சந்தித்ததாகவும்சாட்சி சொன்னார். தஞ்சாவூர் கூட்டுறவு மார்க்கெட்டிங் பெடரேஷனுக்கு பக்கிரிசாமி பிள்ளையுடன் வர்த்தகத் தொடர்பு உண்டு. பெடரேஷன் கணக்குகளைப் பார்த்தால் இது தெரியவரும். பெடரேஷனுக்காக அவர் எவ்வளவு நெல் விற்றிருக்கிறார் என்பதும் தெரியும் என்றார்.

பக்கிரிசாமி பிள்ளை தாமாகவேதான் தாண்டவராயனை அழைத்துக்கொண்டு தன்னிடம வந்தாரென்றும், அவர்களுடன வேறு யாரும் வரவில்லை என்றும், அவர்களுடன் தான் பேசிய விவரங்கள் வேறு யாருக்கும் தெரியாதென்றும் சாட்சி மேலும் சில கேள்விகளுக்கு பதிலளிக்கையில் தெரிவித்தார்.

## கேரளத்தில் அரிசி விலை

கேரளத்தில் நிலவிய விலை விவரத்தைக்கண்டறிய பெடரேஷன் அதிகாரிகள்சென்றது பற்றிய கேள்விகளுக்கு சாட்சி பதிலளிக்கையில், அங்கு நிலவிய விலை என்ன என்பதைச் சொல்ல முடியாவிட்டாலும் அதிகாரிகளின் அறிக்கையில் இருந்து நல்ல விலை கிடைக்குமென்று தெரிந்து கொண்டதாகச் சொன்னார்.

தன்னுடைய யோசனையின் பேரில் தான் ஸ்டாக்குகளை ஏலம்விட அரசு ஒப்புக்கொண்டது என்று தியாகராஜமுதலியார் சொன்னார். நெல் விற்பனைக்குபெடரேஷன் எழுத்து மூலம் ஒப்பந்தம் செய்து கொள்ளும் வழக்கமில்லை என்றார்.

## விசேஷ சலுகை கோரவில்லை

பிறகு அமைச்சர் ப. உ. ஷண்முகத்தின் வக்கீல் ஆர். கிருஷ்ணமூர்த்தி சாட்சியை குறுக்கு விசாரணை செய்தார். தாண்டவராயன் தன்னைச் சந்தித்தபோது இந்த பேரத்தில் அமைச்சர் சண்முகத்துக்கு அக்கறை உண்டு என்று சொல்லவில்லை என மறுத்தார். இந்த பேரம சம்பந்தமாக விசேஷ சலுகை எதுவும கோரி தானும அமைச்சரை அணுகவில்லை என்றார்.



# "தயவுப் பெரு நெறி"

(அருட்பிரகாச வள்ளலார் காட்டிய சமரச சுத்த சன்மார்க்க கொள்கை விளக்கம்)

## 1. அருட்பெருஞ்ஜோதி உண்மை

அகண்ட பெருவெளியில், எண்ணடங்கா ஜோதி அண்டங்கள், எவ்வளவோ காலமாக ஒளிவீசி உலகெலாம் விளங்கச் செய்து கொண்டுள்ளன. இவைகளை எலலாம் தோற்றுவித்து, உயிரினங்களை யாவும் வாழ்வித்து, உயரின பக்குறிக்கோளை நோக்கிச் செலுத்திக் கொண்டுள்ளது எது? அதுதான் அருட்பெருஞ் ஜோதியாக இராமலிங்க வள்ளலார் வழி வெளிப்பட்டுள்ளது. அப்பேரொளியே எங்கும் எக்காலும் இருந்து கொண்டு, எல்லாத் தோற்றங்களுக்கும், எல்லாச் செயல்களுக்கும் காரணமாகியிருந்து கொண்டுள்ளதாம்.

மேற்படி அருள்ஒளியே இன்பு, நாமாகி, நமது அறிவாகி, அவ்வறிவு கொண்டு அதனையே அறிந்து கொள்ளச் செய்கின்றதாம். நமது உண்மையே அருள் ஒளியாக அறியப்படுகின்றதால், அருள் தானே நமது உயிர் உணர்வாகவும் அந்த ஒளியே நம் உருவாகியுள்ள தெனவும் அறிகின்றோம். இது போல, ஒவ்வொரு உயிரிலும், பொருளிலும் அகத்தில் அருளும் புறத்தில் ஒளியும் கூடி விளங்கக் காண்கின்றோம். எனவே, இம்மாபிரபஞ்சத்தே எங்கணும் உள்ளும் புறமும் நரம்பியுள்ளது ஒன்றாகிய அருட்பெருஞ் ஜோதியே என்பது உண்மை.

# "இழப்புக்கு இடையே தி. மு. க. சாதனை": கருணாநிதி பேச்சு

சென்னை, ஜூலை 10—மதுவிலக்கு போன்ற துறைகளில் வருமான இழப்புக்கு இடையே ஏழைகளுக்கு வீடு கட்டித் தருவதில் 17 கோடி ரூபாயை தி. மு. க. அரசு செலவிட்டிருப்பதாக முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.

சென்னை சைதாப்பேட்டை தொகுதியில் குடிசைமாற்று வாரியத்தினால் கட்டப்பட்டுள்ள புது குடியிருப்புகளை முதலமைச்சர் கருணாநிதி நேற்று திறந்துவைத்தார்.

அவர் கூறியதாவது:

இவ்வளவு அழகான கட்டிடங்கள் குடிசைகளில் வாழ்கிற மக்களுக்குக் கிடைக்குமா என்ற ஏக்கப் பெருமூச்சு ஒரு காலத்தில் எங்களுடைய உள்ளத்தில் எழுந்தது. அந்த ஏக்கத்தைத் துடைக்கின்ற முதல் முயற்சியாகத்தான் இந்த வாரியத்தை நாங்கள் உருவாக்கினோம்.

இந்த வாரியம் உருவாக்கப்பட்டபோது. "இதென்ன குடிசை மாற்றுவாரியம்? ஏதோ அரங்கண்ணலுக்கு ஒரு தலைவர் பதவி கொடுக்க இந்த வாரியம்" என்று சிலர் சொன்னார்கள். "இது வாரியம் மாத்திரமல்ல; இதோ பாருங்கள். இதனுடைய தலைவர் அரங்கண்ணல் செய்திருக்கிற காரியம் எவ்வளவுமேலானது, என்பதைக் காட்டும வகையில்தான் இந்த எழில் மாடக் கூடங்கள் இங்கே அமைந்திருக்கின்றன.

## காதலர்கள்

இவைகளைப் பார்க்கும் நேரத்தில் சிலருக்கு இவர்களால் இதை எப்படி செய்ய முடிந்தது என்று கேட்கத் தோனறும். இன்னும் சிலர் இதென்ன பிரமாதம் என்று நினைப்பார்கள். எப்போதுமே ஒன்றை செய்துமுடித்த பிறகு அது சாதாரணமாக தோன்றும் சில காரியங்கள் முடிகின்ற வரையில் பிரமாதமாகத் தோன்றும், செய்து முடித்தபிறகுசாதாரணமாகத் தோன்றும். உலகத்தில் எல்லாமே அப்படித்தான.

காதலர்களுக்குக் கூட முதலில் அவர்கள காதல் கைகூடுகின்ற வரையில் அதனுடைய சிரமங்களை உணாவார்கள்; கடிதப் போக்குவரத்து, சந்திப்பு பெற்றோர்களின் சம்மதம் என்று பல சிரமங்கள் இருக்கும். பிறகு திருமணம் முடிந்து ஒரு குழந்தையும் பிறந்த பிறகு, இது என்ன பிரமாதம் என்று சொல்லத் தோன்றும். அதற்காக முதலில் பட்ட கஷ்டங்கள் தெரியாமல் போய்விடும்.

அந்த வகையிலதான் இந்த காரியங்கள் எவ்வளவோ நெருக்கடிகளுக்கிடையே நடைபெறுகின்றன. இந்தியாவில் தமிழ்நாடு, குஜராத் ஆகிய மாநிலங்களைத் தவிர மற்றமாநிலங்கள்மதுவிலக்குக் கொள்கையை கடைப்பிடிக்காத காரணத்தால் கோடிக் கணக்கான ரூபாய்களை ஆண்டுதோறும் வருமானமாகப் பெற்றுக்கொண்டிருக்கிறார்கள். நாம 58 கோடி ரூபாய் ஆண்டு வருமானத்தை இழந்துவிட்டு மதுவிலக்கை அமுல்படுத்தி இந்தக காரியத்தைச் செய்கிறோம்.

அதைப்போல குதிரைப் பந்தயத்தை ஒழித்து, அதன் மூலம் இரண்டு, மூன்று கோடியை இழந்துவிட்டும் இந்தக் காரியத்தைச் செய்கிறோம். பரிசுச் சீட்டுகளை வருகிற செப்டம்பரோடு நீக்கிவிட்டு, அதிலே கிடைக்கூடிய இரண்டு மூன்று கோடி ரூபாயை இழந்துவிட்டு இந்தக் காரியத்தைச் செய்கிறோம். இந்த ஐந்தாண்டுகாலத்தில் நாம்கட்டி முடித்திருக்கிற இந்த வீடுகளுக்கு ஆகியிருக்கிற செலவு மாத்திரம் ஏறத்தாழ பதினேழு கோடி ரூபாயாகும்.

இன்னும் பல குடிசைப் பகுதிகள் இருக்கின்றன. அங்கெல்லாம் நம்முடைய செயல் திறன்கள்சென்றாகவேண்டும். அந்தக் குடிசைகள் எல்லாம் கோபுரங்களாக மாறிடவேண்டும். இவ்வளவும்மாநில அரசின் சார்பிலே செய்யப்பட்டிருக்கிற காரியங்கள் என்றார் கருணாநிதி.

# ஏவி. எம். ஸ்டுடியோ விரைவில் திறப்பு: ஏ. எல். எஸ். தகவல்

சென்னை, ஜூலை 10— ஏவி. எம். ஸ்டுடியோவை விரைவில் திறப்பதற்காக தொழிலாளர் நல அமைச்சர் ராஜாராம் மூலமாக நிர்வாகத்தினருக்கும், தொழிலாளர்களுக்கும இடையில் பேச்சுவார்த்தை நடக்கிறது என்று ஏ. எல, சீனிவாசன் கூறினார்.

இன்னும் ஒரு வாரத்திற்குள் ஏவி.எம் ஸ்டுடியோ சம்பந்தமான பிரச்னை சரியாகிவிடும். விரைவில் ஸ்டுடியோ திறக்கப்படும் என்றும் அவர் கூறினார்.

நேற்று நிருபர்களுக்கு பேட்டியளித்து மேலும் அவர் கூறியதாவது:—

சினிமா கொட்டகைளில் கள்ள டிக்கெட்டுகள் அச்சடித்து, அதில் போலி முத்திரையிட்டுவிற்கின்றனர். சில திரையரங்குகளில் டிக்கெட் கொடுக்காமல் பணம் வாங்கிக்கொண்டு உள்ளே அனுப்பி வைக்கின்றனர்.

இவ்வாறு செய்வதனல் அரசாங்கத்துக்கும், தயாரிப்பாளர்களுக்கும் ரூ. 14கோடி வரை இழப்பு ஏற்படுகிறது. அந்தப்பணம் முழுவதும் கறுப்புப்பணமாகப் போய்ச் சேருகிறது. அரசாங்கம் ரூ. 7 கோடி வரை வரியை இழக்கிறது. சினிமா துறையினருக்கு ரூ. 7 கோடி நஷ்டம். இதில் மத்திய அரசுக்கு சேரவேண்டிய வரியும் ஏய்க்கப்படுகிறது. இதனல் தமிழ் சினிமா உலகில் பொருளாதாரச் சீர்குலைவு ஏற்படுகிறது

இதனை அரசாங்கம் தலையிட்டு, உடனடியாக கள்ள டிக்கெட்டு, வரிஏய்ப்பு இவைகளைக் கண்டுபிடித்து ஒழிக்க வேண்டும். இதற்கு பறக்கும் படையினர் மூலம் சினிமா கொட்டகைகளில் திடீர் சோதனை நடத்தவேண்டும். தவறு நடக்கும் தியேட்டரின் லைசென்சை ரத்துசெய்யலாம் ஒரு சினிமா காட்சிக்கு இவ்வளவு என்று மொத்தமாக தியேட்டர உரிமையாளாகள் பணம் கட்டினல் அரசுக்கு சேரவேண்டிய வரி வசூலாகிவிடும் சில ஊர்களில் இஷ்டம் போல் 6 காட்சிகள் 7 காட்சி என்று நடத்துவதைத்தடுத்து 3 காட்சிகள் மட்டும் நடத்த அனுமதிக்க வேண்டும். திருவிழாக் காலங்களில் மட்டும் 6 காட்சிகள் நடத்த அனுமதிக்கலாம்,

சினிமா கொட்டகை அதிபர்கள் அதிகமாக வாடகை பெறுகிறார்கள். மற்றமாநிலங்களில் இப்போதைப் போல் வசூலில் 3-ல் ஒரு பங்கு தொகையை வாடகையாக அவர்கள் பெறவேண்டும்.

வெளி மாநிலங்களில் படப்பிடிப்புக்குச் சென்றவர்கள் அங்குள்ள செலவுகாரணமாக மீண்டும் சென்னையிலேயே படப்பிடிப்புகளை வைத்துக கொள்ள விரும்புகின்றனர். எனவே, விரைவில் ஸ்டுடியோக்கள் திறக்கப்பட்டு சென்னையில் பழைய நிலைமை வந்துவிடும் என்று நம்புகிறேன்.

இவ்வாறு பட அதிபர் ஏ. எல். சீனிவாசன் கூறினார்.

# அரிசி லாரியை மடக்கிய தாசில்தார் மீது தாக்குதல்

நெல்லூர், ஜூலை 10— தமிழ்நாடு ஆந்திரா எல்லையில் தமிழ்நாட்டை நோக்கி அரிசி கடத்திவந்த லாரியை மடக்கிப் பிடித்த துணைதாசில்தார், போலீஸ்காரர் ஆகியோர் மீது தாக்குதல் நடத்தப்பட்டது. ஆயுதங்களுடன் வந்த கூட்டத்தினர் லாரியை சட்ட விரோதமாக மீட்டு தப்பிச் சென்றனர்.

இச் சம்பவம் தமிழ்நாடு—ஆந்திர எல்லையில் பீமல்வாரி பாளையம் என்னுமிடத்தில் உள்ள சோதனைச் சாவடியில் நடநதது.

பர்மிட் இல்லாமல் 126 அரிசி மூட்டைகளைக் கடத்தி வந்த ஒரு லாரியை அந்த சோதனைச் சாவடியைச் சேர்ந்த துணை தாசில்தாரும் தலைமை போலீஸ்காரரும் மடக்கிப் பிடித்தனர். அந்த லாரி அங்கு நிறுத்தி வைக்கப்பட்டது. மறுநாள் காலையில் தமிழ்நாட்டைச் சேர்ந்த ஆரம்பாக்கம் பகுதியிலிருந்து ஒரு கார் வந்தது. உடனே பயங்கர ஆயுதங்களுடன் சுமார் 50 பேர் அங்கு வந்து சேர்ந்தனர். அவர்கள் துணை தாசில்தாரையும், தலைமைப் போலீஸ்காரரையும் தாக்கினர். தலைமை போலீஸ்காரரிடமிருந்து லாரியின் சாவிகளைபறித்துக்கொண்டனர். லாரி அங்கிருந்து கிளம்பி பனங்காடு சோதனைச்சாவடியையும் பொருட்படுத்தாமல் வேகமாகச் சென்றது.

சற்று நேரத்தில் அந்த நபர்களில் சிலர் அதே காரில் வந்து லாரியின் டிரிப் ஷீட்டையும், 'லேபில்'ஐயும் கொடுக்கும்படி கேட்டனர். ஆனல் அதிகாரிகள் முன் கூட்டியே அவற்றை சோதனைச் சாவடியின் கூரைக்குள் ஒளித்துவைத்து விட்டனர்.

காரில் வந்தவர்கள் அவற்றைக் கேட்டுக்கொண்டிருந்தநேரத்தில் அக்கம் பக்கத்திலிருந்து மக்கள் கூடிவிடவே அந்த நபர்கள்காரில் ஏறிக்கொண்டு தப்பிவிட்டனர்.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூலை 10—

### தங்கம்

| | |
|---|---|
| (24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் | ரூ. 558 00 |
| (22 காரட்) சில்லரை கிராம் | ரூ. 52 75 |

### வெள்ளி

| | |
|---|---|
| பார் வெள்ளி (1 கி. கி.) | ரூ. 1220 00 |
| உள்ளூர் | 1125 00 |
| (வெள்ளி 10 கிராம்) | ரூ. 12 30 |

### மணிலாப்பயறு

| | |
|---|---|
| கோடைகால பட்டாணி மொத்தவிலை | 260 00 |

### மணிலா எண்ணெய்

| | |
|---|---|
| மொத்த விலை | ரூ. 680 00 |
| சில்லரை விலை | ரூ. 7 70 |

### விளக்கெண்ணெய்

| | |
|---|---|
| (100 கி. கி.) சென்னை டெங்கு டெலிவரி திருப்பத்தூர் மொத்த விலை | ரூ. 410 00 |
| சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05 கி. கி.) | ரூ. 70 00 |

### தேங்காய் எண்ணெய்

| | |
|---|---|
| (16.06 கி. கி.) டின் எம்.எஸ்.மார்க் | ரூ. 134 00 |
| முதல் | 136 00 |

### நல்லெண்ணெய்

| | |
|---|---|
| 17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) | ரூ. 138 00 |
| விற்பனை வரி தனி | 140 00 |
| சில்லரை கிலோ 1-க்கு | ரூ. 9 00 |

### கடலைப்பிண்ணாக்கு

| | |
|---|---|
| 70கி.கி. கொண்ட மூட்டைக்கு எக்ஸ்பெல்லர் | ரூ. 70 00 |

### சர்க்கரை

| | |
|---|---|
| பகிரங்க மார்க்கெட் விலை 100 கி. கி. | ரூ. 398 00 |
| முதல் | ரூ. 404 00 |

# பார்லிமெண்ட் கூட்டம், 21-ந்தேதி ஆரம்பமாகிறது

புதுடெல்லி, ஜூலை 10—பார்லிமெண்டின் அடுத்த கூட்டம் இந்த மாதம் 21-ந் தேதி ஆரம்பமாகும். இந்தக் கூட்டம் 28-ந் தேதிவரை நடைபெறும்.

பார்லிமெண்டின் இரு சபைகளான மக்கள் சபை, ராஜ்ய சபை ஆகியவைகளின் கூட்டத்தை ஜனாதிபதி கூட்டுகிறார்.

ஜூன் 26-ந் தேதி ஜனாதிபதி பக்ருதீன் அலி அகமது பிறப்பித்த அவசர நிலை பிரகடனத்தை, பார்லிமெண்டின் இரு சபைகளும் அங்கீகரிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

மாரிக் காலக் கூட்டத் தொடர் இதற்கு முன்பு இவ்வளவு குறைந்த நாட்களுக்குக் கூடியதில்லை. சாதாரணமாக ஒரு மாதம் வரை நடக்கும்.

அரசியல் சட்ட 352 வது பிரிவின்படி, அவசர நிலை பிரகடனம் எதுவும், அது பிறப்பிக்கப்பட்ட தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் பார்லிமெண்டால் அங்கீகரிக்கப்பட வேண்டும். இல்லாவிடில் 2 மாதங்களுக்கு பிறகு அது செல்லாது.

அவசர நிலை பிரகடனத்துக்கு இரு சபைகளின் அங்கீகாரத்தை நாடுவதுடன் அவசரநிலை பிரகடனத்துக்குப் பிறகு எடுத்துக்கொண்ட நடவடிக்கைகளுக்கும் இரு சபைகளின் அங்கீகாரத்தையும் அரசாங்கம் நாடுகிறது. உள்நாட்டுப் பாதுகாப்புப் பராமரிப்புச் சட்டத் திருத்த அவசரச் சட்டமும் அங்கீகாரத்துக்கு வரும்.

மக்கள் சபைக் கூட்டம் ஆரம்பமானதும் பிரதம மந்திரி அவசரநிலை பிரகடனத்துக்கான காரணங்களை விளக்கி விரிவான அறிக்கை வெளியிடக்கூடும்.

## எஃகு உற்பத்தி 13 சதவிகிதம் அதிகரிப்பு

புதுடெல்லி, ஜூலை 10—நடப்பாண்டின் முதலாவது காலாண்டுக் காலத்தில் ஒருங்கிணைந்த எக்கு ஆலைகளில் எக்கு உற்பத்தி கடந்த ஆண்டின் இதே காலத்தைவிட 13.8 சதவீதம் அதிகமாக இருந்தது. விற்பனைக்குரிய தேனிரும்புஉற்பத்தி 35.2 சதவீதம் அதிகரித்தது.

துர்க்காபூரிலுள்ள கலப்பு உலோக எஃகுத் தொழிற்சாலையின் உற்பத்தி, ரூர்க்கேலா உர ஆலையில் கால்சியம் அம்மோனியம் நைட்ரேட் உற்பத்தி ஆகியவையும் சிறப்பாக இருந்தன. பாசிலனை காலத்தில் கலப்பு உலோக எக்குத் தொழிற்சாலை 10.458 டன் விற்பனைக்குரிய எக்கு உற்பத்தி செய்தது. கடந்த ஆண்டின் இதேகாலத்தில் 7,632 டன் விற்பனைக்குரிய எக்கு உற்பத்தி செய்யப்பட்டது. ரூர்க்கேலா உர ஆலையின் உற்பத்தி 1974 ஏப்ரல் முதல் ஜூன் வரை 46,200 டன்னிலிருந்து 1975 ஏப்ரல் முதல் ஜூன் வரை 55,100 டன்னுக உயர்ந்தது.

பிலாய் எக்கு ஆலையில் ஜூன் மாதத்தில் 1,44,015 டன் விற்பனைக்குரிய எக்கு உற்பத்தி செய்யப்பட்டது. இதுவரை இந்த அளவை எட்டியதில்லை.

விற்பனைக்குரிய எக்கு தேனிரும்பு ஆகியவற்றின் கையிருப்பு அதிகரித்துள்ளது. இதற்கு உற்பத்தி அதிகரிப்பும், ரெயில்வேக்கள் காலி வாகன்கள் விரைவாக அளிக்காததும்தான் காரணம். போக்குவரத்தைத் துரிதப் படுத்துமாறு ரெயில்வேக்களிடம் வேண்டப்பட்டுள்ளது.

## இன்றைய சினிமா

**சென்னை**

ராம்: யாருக்கும் வெட்கமில்லை

நியூ எல்பின்ஸ்டன் — சலனம்

மேற்கு மாம்பலம் நேஷனல்: பாபி

சராஸ்: மின்னியம்மா

**குரோம்பேட்டை**

வெற்றி: யாதோங்கி பாராத்

**பல்லாவரம்**

லட்சுமி: நல்ல நேரம்

**தாம்பரம்**

சித்ரா: ராஜஹம்சம்

எம். ஆர். தியேட்டர்: சவாலே சமாளி

**நேஷனல்**: நாளை நமதே

சித்ரா: ரகசிய போலீஸ் 115

**கொளத்தூர்**

ஸ்ரீ குமரன்: கஸ்தூரிவிஜயம்

## பொதுமக்கள் புகார்: சென்னை ரெயில் நிலையத்தில் 50 பேர் கைது

சென்னை, ஜூலை 10—பொது மக்கள் கொடுத்த பல்வேறு புகார்களைத் தொடர்ந்து சென்னை ரெயில்நிலையங்களில் 50 பேர் கைது செய்யப்பட்டுள்ளனர்.

ரெயில்களில் துண்டுவிரித்து இடம் பிடிப்பது ரெயில் டிக்கெட் வாங்கிக் கொடுத்து கமிஷன் பெறுவது, சுகாதார மற்ற முறையில் தின்பண்டங்களை விற்பது, அனுமதியில்லாமல் கூலிவேலைப் பார்ப்பது போன்ற பல்வேறு புகார்கள் பொதுமக்களிடமிருந்து ரெயில்வே அதிகாரிகளுக்கு வந்து கொண்டிருந்தன.

இதன் பேரில் நடவடிக்கையை விரைவுபடுத்தும்படி தென்பிராந்திய ரெயில்வே ஜெனரல் மேனேஜர் சால்தாவும் தலைமைப் பாதுகாப்பு அதிகாரி செல்லப்பாவும் உத்தரவிட்டனர்.

இதைத் தொடர்ந்து 50 பேர்களை ரெயில்வே பாதுகாப்புப்படை இன்ஸ்பெக்டர் சி. எம். ஆர். ஷெரீப் கைது செய்தார்.

## இருப்புக்கனி ஏற்றுமதி செய்யும் நாடுகள் சங்கம்

புதுடெல்லி, ஜூலை 10—இரும்புக் கனிஜம் ஏற்றுமதி செய்யும் நாடுகளின் சங்கத்தை ஏற்படுத்தும் ஒப்பந்தத்தில்மத்தியவர்த்தக அமைச்சர் சட்டோபாத்யாயா கையெழுத்திட்டார். வெளியுறவு அமைச்சர் ஒய். பி. சவான், இந்தியாவின் சார்பில் ஒப்பந்தப் பத்திரத்தைப் பெற்றுக் கொண்டார். இந்த ஒப்பந்தத்தை சட்டரீதியில் தன்னிடம்வைத்துக் கொள்ளும் பொறுப்பை இந்தியா ஏற்றிருக்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

1975, ஏப்ரல் 2, 3-ந் தேதிகளில் ஜெனீவாவில் நடந்த இரும்புக்கனிஜம் ஏற்றுமதி செய்யும் நாடுகளின் கூட்டத்தில் இந்த ஒப்பந்தம் முடிவு செய்யப்பட்டு ஏற்றுக் கொள்ளப்பட்டது. ஒப்பந்த வாசகத்தில், அல்ஜீரியா, ஆஸ்திரேலியா, பிரேசில், சிலி, இந்தியா, மாரிடானியா, பெரு, சியாரா லியோன், ஸ்வீடன், டுனிசியா, வெனிசுயலா ஆகிய 11 நாடுகள் கையெழுந்திட்டன.

ஒப்பந்தப் பத்திரத்தில் இந்தியா தவிர, அல்ஜீரியா, சிலி, மாரிடானியா, வெனிசுயலா ஆகிய நாடுகளும் கையெழுத்திட்டிருக்கின்றன, ஒப்பந்தத்தில் ஏழு நாடுகள் கையெழுத்திட்ட 30 நாட்களில் இந்தச் சங்கம் இயங்க ஆரம்பிக்கும்.

இரும்புக் கனிஜ ஏற்றுமதி வர்த்தகத்தை முறையான ரீதியில் வளர்ப்பது, இரும்புக் கனிஜத்துக்கு நியாயமான, ஆதாயமான விலை பெற முயற்சிப்பது, விற்பனை முறைகளை சீர்படுத்துவது, உறுப்பு நாடுகளுக்கிடையே நெருங்கிய ஒத்துழைப்பை வளர்ப்பது ஆகியவையே இரும்புக் கனிஜம் ஏற்றுமதி செய்யும் நாடுகள் சங்கத்தின் நோக்கமாகும்.

## காவிரி நீர்ப் பிரச்னை; தேவராஜ் அர்ஸ் பேட்டி: "விதிகளை மீறி அதிக தண்ணீரைத் தேக்கிவிட்டோம்"

பெங்களூர், ஜூலை 10—காவிரி நீர்ப் பிரச்னையில் தமிழகம், கர்நாடகம் ஆகிய இரு மாநிலங்களுக்குமிடையே ஏற்பட்டுள்ள விதிகளை மீறி கிருஷ்ணராஜ சாகரில் அதிகத் தண்ணீரைத் தேக்கிவிட்டோம் என்று கர்நாடக முதல்வர் தேவராஜ் அர்ஸ் கூறினார்.

நேற்று கர்நாடகமுதலமைச்சர் தேவராஜ் அர்சை தமிழ்நாடு பொதுப் பணித்துறை அமைச்சர் ப. உ. சண்முகம் சந்தித்துப் பேசியபோது, காவிரி தண்ணீரை விடுவிப்பது சம்பந்தமாக தமிழ்நாட்டின் கோரிக்கையைகர்நாடக மாநிலம் அநேகமாக நிராகரித்துவிட்டது.

"இப்போதைய சூழ்நிலையில் தமிழ்நாட்டுக்கு வழக்கமான அளவு தண்ணீர் சப்ளை செய்யவேண்டும் என்ற தமிழ் நாட்டின் கோரிக்கை எடுபடாது" என்று அர்ஸ் சண்முகத்திடம் கூறிவிட்டார். ஆனல், தண்ணீர் பகிர்வு சம்பந்தமாக புதிய விதிகளும், கட்டுப்பாடுகளும் உருவாக்கப்பட வேண்டும் என்றார்.

தமிழ்நாட்டுக்கு வழக்கம் போல் காவிரி தண்ணீரை விடும்படி அர்சிடம் சண்முகம் கேட்டுக் கொண்டார்.

இந்த ஆண்டு முதல் கிருஷ்ணராஜ சாகரிலிருந்து தண்ணீர் விடும் அளவைக் கட்டுப்படுத்தி யிருப்பதாக அர்சின் கவனத்துக்குக் கொண்டுவந்தேன் என்று சண்முகம் பின்னர் நிருபர்களிடம் கூறினார்.

1924-ம் வருஷத்திய ஒப்பந்தப்படி கர்நாடகா 25000 டிஎம்சி (ஒரு டிஎம்சி என்பது 100 கோடி கன அடியாகும்) தண்ணீர் விட வேண்டும். இந்த ஆண்டிலிருந்து கர்நாடகா வழக்கமான சப்ளையை விடுக்கவில்லை என்று சண்முகம் கூறினார்.

1924-ம் வருஷத்திய ஒப்பந்தம், 1974-ல் காலாவதியாகிவிட்டதாக கர்நாடக அரசு வாதிப்பதால், இவ்விஷயத்தில் மத்திய அரசின் தலையீட்டை தமிழ்நாடு கோரியிருப்பதாக சண்முகம் சொன்னார்.

சண்முகத்துடன் தமிழ்நாடு அரசுத் தலைமைச் செயலாளரும் தலைமை என்ஜினியரும் வந்துள்ளனர். இந்த அதிகாரிகள் கர்நாடக மாநில அதிகாரிகளுடன் பேச்சு வார்த்தை நடத்தினர்,

காவிரி தண்ணீரை தமிழ்நாடு வீணாக்குகிறது அல்லது கடலில் விடுகிறது என்ற புகாரை சண்முகம் மறுத்தார் கீழ் அணைக்கட்டுக்கு அப்பால் கடைக்கோடிப் பகுதியில் விழும் மழைத் தண்ணீர்தான் நாகப்பட்டினம் வழியாக கடலில் போய் விழுகிறது என்றார். கீழ் அணைக்கட்டுக்கு அப்பால் கால்வாய்கள்தான் உள்ளன என்றும் அவை நேரடியாக நெல்வயல்களுக்குத் தண்ணீர் பாய்ச்சுவதாகவும் அவர் சொன்னார்.

### அர்ஸ் பேட்டி

வழக்கம்போல் தண்ணீர் சப்ளை செய்யவேண்டும் என்பது சம்பந்தமாக தமிழ்நாட்டின்கோரிக்கை இப்போதைய சூழ்நிலைகளில் செல்லாது என்று தமிழ்நாடு மந்திரியிடம அர்ஸ் கூறினார், தண்ணீரைப் பகிர்ந்து கொள்வது சம்பந்தமாக இரு சர்க்கார்களும் கூடிப்பேசி புதிய விதிகளையும் கட்டுப்பாடுகளையும் உருவாக்க வேண்டும் என்று சண்முகத்திடம் அவர் கூறினார்.

"நாங்கள் போதிய தண்ணீரை விடுவிக்கவில்லை என்று தமிழ்நாடு கருதுகிறது. ஆனல் காவரியிலிருந்தும் கபினியிலிருந்தும் தமிழ்நாட்டுக்குத் தண்ணீர் போக நாங்கள் அனுமதிக்கிறோம்" என்றார்.

### விதியை மீறி நீர்தேக்கம்

கிருஷ்ணராஜசாகரில் நீர்மட்டம் வழக்கமான அளவை விட 2 டிஎம்சிதான் அதிகம் என்று தமிழ்நாட்டிடம் தாம் கூறியிருப்பதாக அர்ஸ்சொன்னார்.

கபினியை பொறுத்தவரை கர்நாடகா 19 டிஎம்சிஎம் தண்ணீரை நிறுத்திவைத்துக்கொள்ள உரிமை உண்டு. எனினும் கபினியில் நீர்மட்டம அதிகமாகயில்லை என்றார்.

தமிழ்நாட்டுக்கு தண்ணீர் விடுவதை கர்நாடகா நிறுத்தவில்லை என்று அர்ஸ் கூறினார்.

இரு தரப்பினரும் கூடி நீர்த்தேக்கம், மற்ற தொழில் நுட்பப்பிரச்னைகளை விவாதிக்க வேண்டும் என்று அர்ஸ் யோசனை கூறினார். இதற்கு ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில் காவிரி நீர் பிரவேசிக்கும் இடத்திலிருந்து பல்வேறு முனைகளில் நீர்த்தேக்கத்தைப பயன்படுத்து

3-ம் பக்கம் பார்க்க

## வருமான வரி ஏய்ப்பை கண்டு பிடிக்க விசேஷ பறக்கும் படை

புதுடெல்லி, ஜூலை 10—கள்ளப் பணத்தைக் கொண்டு ஆடம்பர பங்களாக்களைக் கட்டி வரி ஏய்ப்பில் ஈடுபட்டவர்களைக் கண்டுபிடிப்பதற்காக சென்னை, பம்பாய், டெல்லி, கல்கத்தா ஆகிய நகரங்களில் வருமானவரி அதிகாரிகளைக் கொண்ட விசேஷ பறக்கும் படைகள் அமைக்கப்பட்டுள்ளன.

பறக்கும் படையினர் இந்த நகரங்களில் உள்ள ஆடம்பர பங்களாக்களை ஆராய்வர்.

பிரதமர் இந்திரா அறிவித்திருந்த 20 அம்ச பொருளாதாரத் திட்டத்தின் பகுதியாக இந்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டுள்ளது. சொத்துக்களை மதிப்பிடும் வேலையை இந்தப் படைகள் மேற்கொள்ளும் என்று இந்திராகாந்தி கூறியிருந்தார்.

மனைகள். அதன் விற்பனை விலை, கட்டிட அடித்தளப் பரப்பு, எத்தனை மாடிகள்கட்டப்பட்டுள்ளன என்பதுபற்றியும கட்டிடங்களின் மற்ற விவரங்கள் சம்பந்தமாகவும இந்த விசேஷப் படைகள் சேகரித்துத் தரும தகவல் அடிப்படையில் வருமான வரி அதிகாரிகளும நிர்வாக என்ஜினீயர்களும ஆங்காங்கு நேரில் சென்று மேற்பார்வை செய்வார்கள்.

விற்பனைக் காரியங்களுக்காக சொத்துக்களைக் குறைத்து மதிப்புக் காட்டி வரி ஏய்ப்பதைக் கண்டுபிடிப்பதற்காக ஏற்கனவே வருமானவரி அதிகாரிகள் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளுடன் புதிதாக இப்போது விசேஷப்படைகள் நியமிக்கப்பட்டுள்ளன.

### ஆடம்பர பங்களா

ஒவ்வொரு பெரு நகரிலும் கவனிக்கப்பட வேண்டிய பகுதியைப் பொறுத்து, இந்த விசேஷப படைகளில் பல பிரிவுகள் இருக்கும். முதலில் அண்மைக் காலத்தில் ஆடம்பரமான வீடுகள் கட்டுவது அதிகரித்து உள்ள பகுதிகளில் இந்த விசேஷப் படைகள் செயல்படும்.

### அபராதம்

பின்னர் நேரில் சென்று விசாரிக்கும் வருமான வரி அதிகாரிகளும் நிர்வாக என்ஜினீயர்களும், சொத்து பற்றி மதிப்பிடப்படும் விலைக்கும், சொந்தக் காரர்கள் சொத்து பற்றி கொடுத்துள்ள விலை மதிப்புக்கும் இடையே காணப்படும் வேறுபாடுகளைப் பற்றி தெரிவிப்பார்கள். சொத்துக்கள் பற்றி தகவல்தெரிவிக்கப்படாமலோ அல்லது விசேஷப் படை போட்ட மதிப்பீட்டில் 15 சத விகிதம் அல்லது ரூ. 25000 குறைத்து மதிப்பு காட்டப்பட்டிருந்தால் (அல்லது இதில் எது அதிகமோ அது), வருமான வரியாயிருந்தால், வருமான வரியை, செல்வ வரியாயிருந்தால் செல்வ வரியை பாக்கிகளுடனும் அபராதங்களுடனும் வசூலிக்க நடவடிக்கை எடுக்கப்படும்.

ஒவ்வொரு வருமான வரிப் படையும், சம்பந்தப்பட்ட வருமான வரி அதிகாரிகளும் எடுத்துக் கொள்ளப்பட்ட நடவடிக்கை பற்றி 15 நாட்களுக்கு ஒரு முறை அறிக்கைகளை அனுப்பவேண்டும்.

### சொத்து ஆர்ஜிதம்

சொத்துக்களின் மதிப்பைக் குறைத்துக் காட்டுவதின் மூலம் வரி கொடுக்காமல் ஏய்க்கப்படுவதைக் கண்டுபிடிப்பதற்காக முதலில் மேற்கொள்ளப்பட்ட திட்டத்தின் கீழ் நாட்டின் பல்வேறுபகுதிகளில் 137 சொத்துக்களை ஆர்ஜிதம் செய்யஏற்கெனவே உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டுள்ளன. இது சம்பந்தமாக மாநில வாரியாக விவரம் வருமாறு: உ. பி. 22, பஞ்சாப், ஹரியானு, சண்டிகர் 20, தமிழ்நாடு 18, டில்லி 15, கர்நாடகம் 16, மேற்கு வங்கம்5 பீகார் 11 மகாராஷ்டிரா 8, ராஜஸ்தான் 13, குஜராத் 6 ஆந்திரா 2, ஒரிஸ்ஸா 1.

புதிதாக வருமான வரி செலுத்த வேண்டியவர்களைக் கண்டு பிடிப்பதற்காக, நாடு முழுவதிலும் வருமானவரி இலாகா மேற்கொண்ட சர்வே தீவிரப்படுத்தப்பட்டுள்ளது. இதன் விளைவாக கடந்த நிதி ஆண்டில் புதிதாக வரிசெலுத்தவேண்டியவர்கள் விஷயத்தில் வரி வருமானத்தை மதிப்பிட அல்லது மறு மதிப்பீடு செய்ய 1,33 462 நோட்டீசுகள் அனுப்பப்பட்டன. மேலும் இந்த சர்வேயின் விளைவாக, 1,28 012 பேர் தாமாகவே வருமான வரிக் கணக்குகளை அனுப்பினர்.

## இந்திரா திட்டம்: தமிழரசு கழகம் வரவேற்பு

சென்னை, ஜூலை 10—பிரதமர் இந்திரா காந்தியின் பொருளாதாரத் திட்டத்தை வரவேற்று தமிழரசு கழகத்தின் மத்திய செயற்குழு கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

இந்தக் கூட்டம் மதுரையில் நடந்தது. தமிழரசு கழகத் தலைவர் ம. பொ. சிவஞானம் தலைமை வகித்தார்.

பிரதமர் இந்திராவின் பொருளாதாரத் திட்டம் பற்றி கூட்டத்தில் பின்வரும் தீர்மானம் நிறைவேறியது,

பிரதமர் இந்திரா காந்தி அறிவித்துள்ள முற்போக்கான பொருளாதாரத் திட்டங்களை இக்குழு மகிழ்ச்சியோடு வரவேற்பதுடன் அதனைத் துணிவுடனும், துரிதமாகவும் அமுல் நடத்துமாறு கேட்டுக்கொள்கிறது என்று தீர்மானத்தில் கூறப்பட்டது.

### 7-ம் பக்கத் தொடர்ச்சி

வது சம்பந்தமான தகவலை உத்தியோகத் துறைகள்மூலம் தமிழ்நாடு வழங்க வேண்டும் என்பதையும் கர்நாடகா தெளிவுபடுத்தியுள்ளது. கர்நாடகா இந்தத் தகவலை அளித்துக் கொண்டிருப்பதாக சண்முகத்திடம் அர்ஸ் கூறினார்.

தமிழ்நாடு தண்ணீரை வீணாக்குகிறது என்ற புகார் பற்றி கூட்டத்தில் விவாதிக்கப்படவில்லை என்று அர்ஸ் கூறினார்.

## இந்திராவுக்கு ஆசிய-ஆப்ரிக்க நிறுவனம் ஆதரவு

புதுடெல்லி, ஜூலை 10

"பாசிச சக்திகளுக்கும் ஆதிபத்திய சதித் திட்டங்களுக்கும் எதிராக முக்கியப் போராட்டம் நடந்து வரும் இந்த சமயத்தில் ஆசிய ஆப்பிரிக்க மக்கள் ஒருமைப்பாட்டுநிறுவனம்பிரதம மந்திரி இந்திராகாந்திக்கும் இந்திய மக்களுக்கும் தனது ஆதரவை தெரிவித்துக் கொள்கிறது" என்று அந்த நிறுவனத்தின் தலைமைக் காரியதரிசியும் எகிப்து நாட்டு கலாசார அமைச்சருமான யூசுப் எல். சபாய் பிரதம மந்திரிக்கு அனுப்பிருக்கும் செய்தியில் கூறியிருக்கிறார்.

சோவியத்திலுள்ள தொழிற்சங்க அமைதிக்குழுவின் காரியதரிசி ஈ பாஸமெய்ன பிரதம மந்திரிக்கு அனுப்பியிருக்கும் செய்தியில் "இந்தியாவின் முற்போக்குக் கொள்கைகளை மாற்ற நினைக்கும் ஆதிபத்திய பிற்போக்குச் சக்திகளுக்கு எதிரான போராட்டத்தில், நாட்டுப் பற்றுக்கொண்ட இந்தியக் கட்சிகளுக்கு எங்கள் நிறுவனம் தனது ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறது" என்று கூறியிருக்கிறார்.

## தேர்தல் செலவு: தீர்ப்பை எதிர்த்து ராஜ்நாராயணன் அப்பீல்

அலகாபாத், ஜூலை 10—தேர்தல் செலவுகள் சம்பந்தமாக 1974-ல் திருத்தப்பட்ட மக்கள் பிரதிநிதித்துவச் சட்டம் செல்லுபடியாகுமா என்பது குறித்து ராஜ் நாராயண் அளித்த ரிட் மனு மீது அலகாபாத் ஹைகோர்ட் நீதிபதி சின்ஹா அளித்த தீர்ப்பை எதிர்த்து நேற்று அவர் (ராஜ நாராயண் மேற்கண்ட கோர்ட் டிவிஷன் பெஞ்சுக்கு அப்பீல் செய்திருக்கிறார்.

தங்கள் அபேட்சகர்கள்மீது அரசியல் கட்சிகள் செலவிடும் தொகையைத் தேர்தல் செலவில் கூட்டிக் கணக்கிடக் கூடாது என்று இந்தத்திருத்தம் கூறுகிறது. இது செல்லாது என்று ராஜ நாராயண் ரிட் மனுத் தாக்கல் செய்திருந்தார். அந்த ரிட்மனுவை நீதிபதி சின்ஹா தள்ளுபடி செய்தார். அந்தத் தீர்ப்பை எதிர்த்து ராஜநாராயண் வக்கீலான ஆர். சி ஸ்ரீவஸ்தவா நேற்று அலகாபாத் ஹைகோர்ட் கூடுதல் ரிஜிஸ்தரார் முன் விசேஷ அப்பீல் ஒன்றைத் தாக்கல் செய்தார். கோர்ட் விதிகளின்படி 6 வாரங்கள் முடிந்த பின பெஞ்ச் முன் அப்பீல் விசாரணைக்கு வர வேண்டும்.

அப்பீலின் நகல்கள் எதிர்தரப்பினருக்கு அதாவது பிரதமர் இந்திரா காந்திக்கும் மத்திய அரசுக்கும் அளிக்கப்பட்டன.

பிரதமர் இந்திராகாந்தி தேர்தலை எதிர்த்து ராஜ் நாராயண் தொடுத்திருந்த தேர்தல் மனு மீது விசாரணை நடந்து கொண்டிருந்தபோது மேற்கண்ட ரிட் மனுவை ராஜ் நாராயண் தாக்கல் செய்திருந்தார்.

கடந்த அக்டோபர் மாதம் மக்கள் பிரதிநிதித்துவ சட்டத்தில் மேற்கண்ட திருத்தம் செய்யப்பட்டது. ஓர் வேட்பாளரின் நண்பர்களோ அல்லது அவருடைய கட்சியோ அவர் தேர்தலுக்காகச் செலவிடும் தொகை தேர்தல் செலவு உச்சவரம்பின் கீழ் கட்டுப்படாது என்று திருத்தம் கூறுகிறது. அந்தத் திருத்தம் உடனடியாக அமுலுக்கு வந்தது. நீதி மன்றங்களின் முன் விசாரணையில் உள்ள தேர்தல் செலவுகளை அது கட்டுப்படுத்தும் என்று கூறப்பட்டிருந்தது.

தேர்தல்மனுவுடன் இந்தரிட் மனுவையும் சின்ஹா சேர்த்து விசாரித்தார். இந்திரா காந்திக்காக காங்கிரஸ் கட்சி செலவிடப்பட்டதாகக் கூறப்படும் தொகையும் சேர்த்துக் கணக்கிட்டால்கூட அந்த மொத்தம் நிர்ணய உச்சவரம்புக்கு மேல் போகவில்லை என்று காரணங்கூறி ரிட் மனுவை அவர் தள்ளுபடி செய்தார் இக்காரணத்தின் பேரில் மேற்கண்ட திருத்தம் அரசியல் சாசன பூர்வமானதா என்பதைத் தான் தீர்மானிக்க வேண்டிய அவசியமேற்படவில்லை என்று அவர் கூறினார்,

## பாதாள கிடங்கில் ரூ. 2 கோடி சரக்கு: 3 கோடீசுவரர்கள் கைது

கயா, ஜூலை 10—கயா நகரில் போலீசார் நள்ளிரவில் திடீர் சோதனையிட்டு ஒரு பாதாள கிடங்கில் பதுக்கி வைக்கப்பட்டிருந்த சுமார் 2 கோடி ரூபாய் பெறுமான உணவுப் பொருட்களை கைப்பற்றினார்கள். இதன் தொடர்பாக 3 கோடீஸ்வரர்களை போலீசார் கைது செய்தனர்.

நள்ளிரவில் நடந்த இந்த திடீர் சோதனையில் ஏராளமான கோதுமை, சர்க்கரை, உணவுத் தானியங்களும் சுமார் 16 ஆயிரம் டின்களில் அடைத்து வைத்திருந்த எண்ணெய் பொருட்களும் பூமிக்கடியில் பாதாளக் கிடங்கில் ஒளித்து வைக்கப்பட்டிருந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

கயா மாவட்ட துணை போலீஸ் அதிகாரி கே ஷ் இதுபற்றி நிருபர்களிடம் கூறியதாவது:—

உணவுப் பொருட்களை பெருத்த அளவில் பதுக்கி வைத்துவிட்டு நாட்டில் செயற்கை பற்றாக்குறையை இந்த வியாபாரிகள் ஏற்படுத்தினர். தங்களுடைய கடைகளிலும் விற்பனை செய்யும் பொருட்களின் விலைப்பட்டியலை போடவில்லை. தவிர பொருள்களை ஒன்றுக்கு பத்தாக விலைகளை ஏற்றி பொது மக்களை ஏமாற்றி வந்தனர் என்றார் அவர்.



"உழைக்கும் கரங்கள்" படத்தில் லதா.

# எம். ஜி. ஆரிடம் லதா புடவை கேட்டார்

குடிசை ஒன்றில் இருவர் அமர்ந்திருந்தனர். ஒருத்தி குறத்தி! பார்ப்பவர்கள் விழிகளையும், இதயத்தையும் தன் வாலிப்பான உடற்கட்டால், வனப்பால் வசீகரித்து விடும் பருவமங்கை!

அவள் அருகில் அமர்ந்திருப்பவன் ஒன்றும் சாதாரண



மானவனல்ல—அவனும் ஆண் அழகன்தான்—பெயர் தங்கம்.

மௌனத்தை அவன்தான் கலைக்கிறன்.

"மாணிக்கம்... என்ன மௌனமாக இருக்கிறே" என்கிறன் தங்கம்.

"என்னை ரொம்ப வாயாடின்னு அல்லாரும் சொல்வாங்க. ஆன....இன்னிக்கு உன்னைப் பார்த்ததுக்கப்புறம் பேச்சே வரமாட்டேங்குது" என்கிறள் மாணிக்கம் நாணத்தோடு.

"சரி உனக்குத் துணையா இங்கே யாரு இருக்காங்க?"

"எங்கப்பன் இருக்கான், சதா குடிச்சிட்டு வந்து தொல்லை கொடுப்பான்."

"மாணிக்கம் நீ மாணிக்க மாவே இருப்பே—சீசகிரத்திலே உனக்கு நல்ல துணை கிடைச்சிடுமுன்னு நினைக்கிறேன். உனக்கு ஏதாவது உதவி வேணுமுன்ன கேளு. செய்யக் காத்துக்கிட்டிருக்கிறேன்" என்கிறன் தங்கம்.

"ம்,... கிருஷ்ண பரமாத்மாவுக்கு ஒரு தடவை கையிலே காயம் பட்டுடுச்சாம். அப்போது நம்ப துரோபதையம்மா இல்லே... அவுங்க தன்னுடைய புடவையிலே ஒரு பக்கத்தைக் கிழிச்சு பகவானுக்கு கையிலே கட்டு போட்டாங்களாம். உடனே கிருஷ்ணன் சொன்னராம். 'பாஞ்சாலி,... நீ ,... என் கையில்லை சுத்தியிருக்கிற துணியிலே எத்தனை நூலு இழை இருக்குதோ அத்தனை சேலை தாறேன்னு சொன்னராம். எனக்கு அத்தனை சேலைவேண்டாம். உன் கையாலே ஒரு புடவை எடுத்துகுடுப்பிய ?" என்று ஆசையாக மாணிக்கம் கேட்கிறள்.

"ஒரு புடவை என்ன...நீ போதும்.. போதும், என்கிற அளவுக்கு எடுத்துத் தர்றேன்" என்கிறன் தங்கம்.

"அய்யா...சாமி... நீ சொன்னதே போதும். என் மனசு குளுந்துட்டுது" என்கிறள் மாணிக்கம்.

இக்காட்சி சி,என்.வி. மூவிசாரின் 'நவரத்தினம்' வண்ணப்படத்திற்காக சத்யா ஸ்டுடியோவல் படமாக்கப் பட்டது.

தங்கமாக எம். ஜி. ஆரும், மாணிக்கமாக லதாவும் நடித்தனர்.

கதை வசனம் எழுதி ஏ. பி. நாகராஜன் டைரக்ட் செய்கிறர்.

ஒளிப்பதிவை சண்முகம் கவனிக்கிறர். குன்னக்குடி வைத்தியநாதன் இசையமைக்கிறர்.

கலையைசெல்வராஜ்கவனிக்கிறர்.

## இளைய பாரதம்

சாந்திநிகேதன் குழுவினர் தங்கள் புதிய நாடகத்திற்கு 'இளையபாரதம்' என்று பெயரிட்டுள்ளனர்.

டி. எஸ். சேஷாத்திரி, டி. கே. எஸ். சந்திரன், ராஜசேகர், சைமன், ஏ. என். கண்ணன், பத்து, பி. ஆர். பிரேமா, புவனு ஆகியோர் நடிக்கின்றனர்.

ரவிசங்கர் கதை வசனம் எழுதியுள்ளார்.

டி. எஸ், சேஷாத்திரி டைரக்ட் செய்யும் இந்த நாடகம் 8ம்தேதி கார்த்திக் பைன் ஆர்ட்ஸ்சார்பில் அரங்கேறுகிறது.

"மாமியார் வீடு" படத்தில் ஜெய்சங்கர், நிர்மலா.



# 'மொழி உணர்வு இல்லையே' முத்துராமன் வருத்தம்

"மற்ற மாநிலங்களில்உள்ளவர்களிடம் இருக்கும் மொழி உணர்வு நமக்கு இல்லையே' என்று நடிகர் முத்துராமன் வருத்தத்துடன் கூறினர்.

அமெச்சூர் ஆர்ட்ஸ் அகாடமியின் சார்பில் காஞ்சிபுரத்தில் 'மயங்குகிறள் ஒரு மாது' படக் கலைஞர்களுக்கு பாராட்டு விழா நடைபெற்றது.

விழாவில் பங்கு கொண்டு முத்துராமன் மேலும் கூறியதாவது:—

'இந்தப் படத்தின்வெற்றி தனிப்பட்ட எவருக்கும் உரியதல்ல. இதில் பங்குகொண்ட அனைவருக்கும் உரியது.

ஒரு படம் நன்ருக ஓடினல் ஒரு குறிப்பிட்ட நடிகரின் வெற்றி என்றுதான் கூறுவார்கள், அதைப்போல் இந்தப் படத்தில் யாரையும் கூற முடியாது.

முதல் வெற்றி கதாசிரியருக்கு உரியது. 2 வது டைரக்டருக்கும 3 வது கலைஞர்களுக்கும் பத்திரிகைகளுக்கும் வெற்றியில் பெரும் பங்கு உண்டு.



## மறக்க முடியாத இரு நிகழ்ச்சிகள்

காஞ்சிபுரத்தில் பாராட்டு விழா என்றவுடன் பழைய மறக்க முடியாத நிகழ்ச்சிகள் என் நினைவிற்கு வருகிறது.

1957—ஆம் ஆண்டு அண்ணு இங்கு தேர்தலில் நின்றபோது தேர்தல் நிதிக்காக நாடகம் நடத்த எஸ். எஸ். ஆர். மனேரமா ஆகியோருடன் வந்தேன். அருகில் ஒரு இடத்தில் விபத்து ஏற்பட்டது. ஆஸ்பத்திரியில் சிகிச்சை பெற்றேம்.

1961ம் ஆண்டு 2-வது முறையாக சந்திரமோகன் நாடகத்தில் இதே ஊரில் அண்ணுவுடன சிவாஜி வேடத்தில் நடித்தேன்.

இப்போது 3-வது முறையாக முதன் முதலாக "மயங்குகிறள் மாது" படத்திற்குப் பாராட்டு விழா நடக்கிறது.

மற்ற மொழிப் படங்கள் நன்ருக ஓடுவதாகக் கூறுகிறர்கள். நமது படங்கள் நன்கு ஓடுவதில்லை என்றும் கூறப்படுகிறது.

அண்டை மாநிலத்தில் பார்த்தாலே இதன் காரணத்தைப் புரிந்து கொள்ளலாம்.

## தாய்மொழிப் பற்று

அவர்கள் தங்கள் தாய் மொழிக்கு முதலிடம் தருகிறர்கள். அந்தந்த மொழிக்காரர்கள் அந்தந்த மொழிப் படங்களைத்தான் பார்க்கிறர்கள்.

மற்ற மொழிப் படங்கள் நன்ருகஓடி, தங்கள் மொழிப் படத்திறகு சரியாக வசூல் இல்லாவிட்டால் உடனடியாக அவர்கள் நடவடிக்கையில் ஈடுபடுகிறர்கள்.

முதல் வாரம் தங்கள் மொழிப்படம் ஓடாவிட்டால் அருகில் உள்ள வேற்று மொழிப் படம் ஓடும் தியேட்டர் வாசலில் சென்று நின்று கொள்கிறர்கள். தங்கள் தாய் மொழிப் படங்கள் நடக்கும் தியேட்டருக்குச் செல்லும்படி அங்கு வருபவர்களை திருப்பி அனுப்புகின்றனர்.

தாய்மொழிக்கு முதலிடம் அளிக்கும் அந்த மொழி உணர்வு நமக்கு இல்லையே என்கின்றபோது வருத்தமாக உள்ளது." இவ்வாறு முத்துராமன் கூறினர்.

## சிவாஜியின் வாரிசு

விழாவிற்கு பட அதிபர் ஏ. எல். சீனிவாசன் தலைமை வகித்தார். அவர் கூறியதாவது:—

"நடிப்பிற்கு ஒருவர்சிவாஜி கணேசன். அவர் பிறந்த தமிழ்நாடு என்று பெருமைப் படலாம். அவருக்கு வாரிசாகஇருப்பவர் முத்துராமன்.

இன்று தமிழனைத் தமிழனே பாராட்டிக் கொள்ள வேண்டிய நிலை உள்ளது

ஜூலை 1-ம் தேதி முதல் தணிக்கை முறைகள் மாற்றப் பட்டுவிட்டன. ஆபாசக் காட்சி, வசனங்கள் இனி மேல் இடம்பெற முடியாது. அவைகளுக்கு முக்கியத்துவம் தந்தால் படத்தையே அனுமதிக்க இயலாமல் போய்விடும்" என்றர்.

அகாடமி சார்பில் வடிவேலு வரவேற்றர்.

முத்துராமன், அசோகன், விஜயகுமார், செந்தாமரை, சுஜாதா, கதாசிரியர் பஞ்சு அருணசலம், டைரக்டர் எஸ். பி. முத்துராமன், ஒளிப்பதிவாளர் பாபு, தயாரிப்பாளர் பாஸ்கர், எடிட்டிங் வட்டல் பொதுமக்கள் தொடர்பாளர் 'சித்ரா' லட்சுமணன், அழகப்பன், முத்து ஆகியோருக்கு கேடயங்களை ஏ. எல். சீனிவாசன் வழங்கினர்.

விழாவில் இசை நிகழ்ச்சி நடத்திய விவேக் சாரதிக்கு பொம்மை ஒன்று வழங்கப் பட்டது.



"உணர்ச்சிகள்" படத்தில் கமலஹாசன் எல். காஞ்சனு.

# நந்திதா போஸ் திருமணம் செய்து கொள்கிறர்

முத்து வேலை செய்துவரும் ஆஸ்பத்திரியிலேயே சாந்தி நர்சாகபணிபுரிந்துவருகிறள். சாந்தியின் அக்கா ஆனந்தியை இருமுறை பெண்பார்க்க வருகிறர்கள். பெண் பார்க்க வரும்போதெல்லாம் ஆனந்திக்கு வலிப்புவந்துவிடுகிறது. இதைப் பார்த்துவிட்டு பெண் பார்க்க வந்தவர்கள் சென்று விட்டார்கள். முத்துவுக்கு விவரம் புரிகிறது. ஒரு சமயம் தனது தாயார் ஆனந்தி திருமணத்தை தடுத்து நிறுத்தியதால்தான ஆனந்திக்கு அடிக்கடி வலிப்பு வந்துவிடுகிறது என்று தெரிகிறது. முத்து ஆனந்தியை திருமணம்செய்து கொள்ள விருப்பப்பட்டு, பெண் பார்க்க வருகிறன். ஆனந்தியைப் பார்க்கிறன். ஆனந்தியும் முத்துவை பார்க்கிறள். அதிர்ச்சி ஏற்படவில்லை.

முத்து ஆனந்தியைப் பார்த்துப் பாடச் சொல்ல, ஆனந்தியும்,

'மகராஜன் வந்தான்
என் வாசல் தேடி.
மழைமேகம் போல
மலர் எனனை நாடி,
சொந்தம் பந்தம்
இன்பம் துன்பம எல்லாமே
உன்னல் தானய்யா'

என்று பாடுகிறள். திருமணத்திற்கும் நிச்சயிக்கப்படுகிறது.

இக்காட்சி சுலோசன பிக்சர்ஸ் ஒரு குடும்பத்தின்கதை' படத்திற்காக வாகினி ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

முத்துவாக முத்துராமனும் சாந்தியாக சுமத்திராவும், ஆனந்தியாக நந்திதாபோசும் நடித்தார்கள்.

மற்றும் மனேகர், ஸ்ரீகாந்த் தேங்காய் சீனிவாசன், மனேரமா ஆகியோர் நடிக்கிறர்கள்.

இப்படத்தின் வசனத்தை ராஜாசினுவாசன் எழுத, மனேகர் ஒளிப்பதிவு செய்ய, கலையை ராஜா கவனிக்க எடிட்டிங்கை பாஸ்கர் கவனிக்கிறர்.

கதை, திரைக்கதை டைரக்ஷன் பொறுப்புகளை துரை ஏற்றிருக்கிறர்.

துரைராஜ்—பாலையா இப் படத்தை தயாரிக்கிறர்கள்.



## ஜெயா, விஜயா சிங்கப்பூர் பயணம்

செம்பை வைத்தியநாத பாகவதரின் சிஷ்யர்களும் திரைப்பட இசையமைப்பாளர்களுமான ஜெயா, விஜயா இன்று சிங்கப்பூர் பயணமானர்கள்.

இசை மேதை செம்பையின் உருவப் படத்தை கோலாலம்பூர் கைரளி ஆர்ட்ஸ் கிளப்பில் ஜெயா, விஜயா திறந்து வைக்கிறர்கள்.

சிங்கப்பூர், கோலாலம்பூர், மலேசியாவில் ஒரு மாதம் சுற்றுப் பயணம் செய்து பல்வேறு நிகழ்ச்சிகளில் பங்கு கொண்டு, ஆகஸ்ட் மாதம் சென்னை திரும்புகிறர்கள்.

## உறவு சொல்ல ஒருவன்

பிலிமாலயா கம்பைன்ஸ் 'உறவு சொல்ல ஒருவன்" படப்பிடிப்பு முடிவடைந்தது, இப்படத்திற்கான பின்னணி இசை சேர்ப்பு வேலைகள்நடக்கின்றன.

முத்துராமன், சிவகுமார், சுஜாதா, பத்மபிரியா, செந்தாமரை, சோ, எஸ். வரலட்சுமி, எஸ். என். லட்சுமி ஆகியோர் நடிக்கின்றனர்.

பஞ்சு அருணசலம் திரைக்கதை வசனம் எழுதுகிறர்.

தேவராஜ் மோகன் டைரக்ட் செய்கின்றனர்.

# திரை உலகம்

# சிவாஜி கணேசனின் இரு வெள்ளி விழாக்கள்

சிவாஜி கணேசன் தமிழ்த் திரையுலகிலும், இல்வாழ்விலும் புகுந்து 25 ஆண்டுகள் அடுத்த 1976) ஆண்டு நிறைவடைகின்றன

இரு வெள்ளி விழாக்களை ஒரு சேர கொண்டாடும் வாய்ப்பு சிவாஜி ரசிகர்களுக்கும் கிடைத்துள்ளது.

சிவாஜி கணேசன் நடித்த முதல் படமான "பராசக்தி" 1952-ம் ஆண்டு தீபாவளியன்று வெளிவந்தது.

அடுத்த ஆண்டு நவம்பர் மாதம் 25 ஆண்டுகள் முடிவடைகின்றன.

ஈடு இணையற்ற நடிகராக தமிழ்க் கலையுலகிற்கு பெருமை தேடித் தரும் சிவாஜி கணேசன் வெள்ளி விழாவை மிகச் சிறப்பாகக் கொண்டாட ரசிகர்கள் திட்டமிட்டுள்ளனர்.



'டாக்டர் சிவா' படத்தில் சிவாஜிகணேசன்.

## சிவகுமார் நடிக்கும் "ஆண்பிள்ளை சிங்கம்"

அருள் சந்திரா கம்பைன்ஸ் எனும் புதிய பட நிறுவனத்தினா சிவகுமார் நடிக்கும் புதிய படம் ஒன்றைத் தயாரிக்கின்றனர். இதற்கு "ஆண்பிள்ளை சிங்கம்" என்று பெயரிடப்பட்டுள்ளது. இதற்கான தொடக்கவிழா வாகினி ஸ்டுடியோவல் நடைபெற்றது.

ஏ.சி திருலோக்சந்தர் காமிராவை முடுக்க, முத்துராமன கிளாப் அடிக்க, சிவகுமார் நடித்த காட்சி முதல் நாளன்றுபடமாக்கப்பட்டது.

சோ, மனேரமா, ஜெயலட்சுமி, எம். என். ராஜம், ராஜி, செந்தாமரை, வெண்ணிற ஆடை மூர்த்தி, ஜூனியர் பாலையா, ஸ்ரீபிரியா ஆகியோர் நடிக்கின்றனர்.

முத்துராமனும் சுஜாதாவும் கௌரவ வேடத்தில் நடிக்கின்றனர்.

பஞ்சு அருணசலம் கதை வசனம் எழுதுகிறர். கண்ணதாசன், பஞ்சு பாடல்களுக்கு விஜயபாஸ்கர் இசையமைக்கிறர், பாபு ஒளிப்பதிவு செய்கிறர்.

எஸ். பி. முத்துராமன் டைரக்ட் செய்கிறர்.

Printed by S. V. G. Sowrirajulu at the M. C. P. P. S. Press, No. 4, South Bank Road, Madras-28, and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd

Editor-in-charge : G. Dhanaraj.

## ஏ. எல். எஸ். வண்ணப்படம்: எஸ். பி. முத்துராமன் டைரக்ட் செய்கிறர்

ஏ. எல். சீனிவாசன் தயாரிக்கும் வண்ணப்படம் ஒன்றை எஸ். பி. முத்துராமன் டைரக்ட் செய்கிறர். இந்தத் தகவலை எஸ். பி. முத்துராமனை வெளியிட்டார்.

"கவிஞர் கண்ணதாசனின் 'தென்றல்' இதழில் துணை ஆசிரியராக இருந்த காலத்தில் ஏ எல் எஸ். வருகிறர் என்றல் பயந்துபோய் ஒளிந்து கொள்வேன். அவரிடம் அவ்வளவு மதிப்பு, பக்தி. அவரது படத்தை இயக்குவது எனக்கு மிகவும் பெருமை தருவது" என்றும் முத்துராமன் கூறினர்.

# ஸ்ரீகாந்த் செய்த படுகொலை

அழகிய இளம் பெண் ஒருத்தியுடன் ஸ்ரீகாந்திற்கு தொடர்பு இருந்தது. அதே நேரத்தில் அவள் மீது அவருக்கு சந்தேகமும் இருந்து வந்தது. சந்தேகம் முற்றிவிடவே அவளைக் கத்தியால் குத்திக்கொலை செய்துவிட்டார் ஸ்ரீகாந்த்

ரத்த வெள்ளத்தில் அவள் பிணமாக மிதந்ததைப் பார்த்ததும் பயந்துவிட்டார். போலீசில் மாட்டிக்கொண்டால் தூக்கு மேடைக்கு அனுப்பிவிடுவார்களே என்று அஞ்சிய ஸ்ரீகாந்த் அந்த இடத்திலிருந்து ஓட்டம்பிடித்தார்.

நேரே எம். ஆர் ஆர். வாசுவிடம் சென்றர். வேர்க்க விறுவிறுக்க நடுங்கியபடியே வந்த ஸ்ரீகாந்தைப் பார்த்ததும் நிலைமையைப் புரிந்துகொண்டார் வாசு. முதலில் அவருக்கு பயத்தைப் போக்குவதற்காக விஸ்கியை ஊற்றிக்கொடுத்தார்.

விஸ்கியின் வேகத்தால் தைரியமடைந்த ஸ்ரீகாந்த் நடந்ததைக் கூறி "என்னைக் காப்பாற்றுங்கள்" என்று வாசுவிடம் கெஞ்சினர். அவர் கூறியவற்றை டேப் ரிக்கார்டில் பதிந்துகொண்ட வாசு புதிய திட்டம் ஒன்றை ஸ்ரீகாந்திடம் கூறினர்.

இக்காட்சி 'எடுப்பார் கைப்பிள்ளை' வண்ண படத்திற்காக படமாக்கப் பட்டது. ஜெய்சங்கர் கதாநாயகனாக நடிக்க அவருக்கு ஜோடியாக நிர்மலாவும் குமாரி மஞ்சுளாவும் நடிக்கின்றனர் மே. விஜயன் டைரக்ட செய்கிறர்.

